

யத்ர யத்ர ரகுநாத கீர்த்தனம்
தத்ர தத்ர க்ருதமஸ்த காஞ்ஜலீம்
பாஷ்பவாரி பரிபூர்ண லோசனம்
மாருதிம் ந மத ராக்ஷஸாந்தகம்

*ஸ்ரீஇராமனுடைய கதையைச் சொல்லுமிடங்களில் கையை அஞ்சலி பந்தம் செய்து கொண்டிருப்பவரும், ஆனந்த பாஷ்பத்தினுல் தளும்பிய கண்களையுடையவரும், ராட்சர்களுக்கு யமன் போன்றவருமான அனுமாரை நாம் எல்லோரும் நமஸ்கரிப்போமாக!*

**ஹனுமத் தியான ஸ்லோகம்-ஆதிசங்கரர்.**




தனிப்பிரதி ரூ. 1

வருடச் சந்தா ரூ. 12

மே, 1984

மலா 14
இதழ் 12





**பிரதிகளுக்கு :**

THE WELFARE OFFICER
Publication Section, T.T.D,
K. T. Road,
TIRUPATI.


# உள்ளுறை



**அட்டைப்பட விளக்கம்**

முகப்பில் :
பின்னட்டையில் :
இரண்டாவது :
மூன்றாவது :

தி. தி. தேவஸ்தான பொன் விழா சிறப்புப் புகைப்படக் காட்சிகள்:

# உங்களுடன்....

காலங்கள் மாறிடினும் உலக அரங்கில் நேற்றும் இன்றும் இந்தியா தனக்கென ஒரு தனிச் சிறப்பிடம் பெற்று விளங்குகிறது. நாளையும் இப்பெருமை நம் பாரதத்திற்கு உண்டு. இந்தியாவைப் போன்று பல மொழிகள், பல இனங்கள் வேறு ஒரு நாட்டில் இருந்திருந்தால், அந்நாட்டின் காவிரியிலும், கங்கையிலும் தண்ணீர் ஓடியிருக்காது, செந்நீர்தான் புரண்டோடிக்கொண்டிருக்கும். இது போன்று நடவாது இருப்பதற்குக் காரணமென்ன என்பதைச் சற்றே சிந்தித்தோமானால், இந்து சமயத்தின் பெருமையும் சிறப்பும் நமக்கு நன்கு தெரியவரும். உண்ணும் உணவிலும், உடுக்கும் உடையிலும் இடத்திற்கு இடம் மாறுபாடு கொண்டிருக்கும் இந்தியன், தன் வாழ்நாளில் ஒரு தடவையாவது இராமேஸ்வரத்திற்கும், பத்ரிநாத்திற்கும் செல்ல வேண்டும் என்ற ஒரு உள் உணர்வுடன் இருக்கின்றான் எனின் அதற்குக் காரணம் என்னவாக இருக்கும்! அதுதான் இம்மண் தந்திட்ட சமய உணர்வின் மாண்பு. இத்தகுச் சிறப்புமிகு இந்து சமயத்தில் ஈடுபட்டு, அதன் அருமையை அறிவித்து வளர்த்தவர்கள் பல சமயப் பெரியோர்கள். அவர்கள் தந்திட்ட தத்துவக் கருத்துக்களும். சமயக் கொள்கைகளும், சமய இலக்கியங்களும் இந்து சமயத்தின் கருத்துக் கருவூலங்களாகவும், பக்திப் புதையல்களாகவும் விளங்குகின்றன. இந்து சமயத்தின் மேன்மை நமது வேதங்களில் பொதிந்திருந்தாலும், அவ் வேதக் கருத்துக்களை சாமான்யனும் உய்த்துணர்ந்து உயர்கதி பெற்றிட, நம் சமயப் பெரியார்கள் அவற்றினை பல சமய இலக்கியங்களின் மூலம் அள்ளித் தந்துள்ளார்கள். இவ்வாழ்க்கை இலக்கியங்களை, ஏதோ நம் முன்னோர்களால் உண்டு உறங்கி விழித்த நேரத்தில் அவிழ்த்து விட்ட புளுகுக்குவியல்கள் என நாம் நினைத்தோமானால், நாம் திருந்துவதற்கு நாம் எத்தனை பிறவிகள் எடுத்தாலும் போதாது என்ற முடிவுக்குத்தான் வரவேண்டும்.

நம்மிடம இருக்கும் சமய இலக்கியங்கள் ஒவ்வொன்றும் ஒரு மாணிக்கப் பெட்டகமாக இருந்தாலும், இராமனின் கதையைக் கூறிடும் இராமாயணம் ஒரு தனிச் சிறப்பு கொண்டு திகழ்கின்றது. அக்காவியத்தில் உலவும் பல பாத்திரங்கள் ஒன்றை ஒன்று மிஞ்சிடும் வகையில் ஒளிர்விடுகின்றன. அவற்றுள் ஒன்று அனுமனின் படைப்பு. தலைவனாலும், தொண்டர்களாலும், பகைவர்களாலும், போற்றப்படும் மாட்சிமை கொண்டவன் அஞ்சனையின் மைந்தன் அனுமன். பிறப்பால் விலங்கானாலும், பண்பால் மனிதனாக நடமாடி, ஆற்றலால அறிஞனாகத் திகழ்ந்து, அடக்கம், அன்பு, அருள், பொறுமை, தியாகம் போன்ற இறைமைப் பண்புகளால் தெய்வமாக விளங்கி சுடர்விட்ட அனுமனின் பாத்திரம் நமக்கு ஒரு சிறந்த வழிகாட்டி.

இராமாயணத்தின் மற்றைய காண்டங்கள் அவ்வவ் இடத்திற்கும், நிகழ்ச்சிகளுக்கும் உரிய பெயர்கள் கொண்டு விளங்க, தனி மனிதன் ஒருவனின் பெருமையை விளக்கிடும் வகையில், அனுமனின் புகழ்பாடும் பகுதியாக சுந்தர காண்டம் விளங்குகிறது. சுந்தரம என்றால் அழகு என்று பொருள்படும். அனுமனின் உருவத்திற்கும் அழகிற்கும் சிறிதும் பொருத்தமில்லை எனினும், அவன் உலவிய பெரும் பகுதிக்கு சுந்தர காண்டம் எனப பெயரிட்டான் வான்மீகி! ஏன்? அழகு என்பது வெளித் தோற்றத்தைக் கொண்டு எடை போடும் ஓர் அளவுகோல் அல்ல. பண்பாலும் செயலாலும் நாயகனாக அமையும் போதுதான் மனிதன் அழகனாகக் கருதபபடுகின்றான். இதைத்தான் சுந்தர காண்டம் நமக்குக் கூறுகின்றது. மனிதனுக்குத் தேவையான ஆன்மிக உயர்வு காண நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணை போன்ற யோகப் பண்புக் கூறுகளைக் கொண்டு, ஆத்ம பலம், மனோ பலம், புத்தி பலம், தேக பலம், பிராண பலம், சம்பத் பலம் ஆகிய திறமைகளைப் பெற்று, தியாகம், கடமை, நேர்மை, நுண்ணறிவு ஆகியவை கொண்டு விளங்கும் அனுமன் உண்மையிலேயே அழகுக்கு இலக்கணம் வகுத்த ஒரு பேரழகனே என்பதில் சிறிதும் ஐயமில்லை.

சுக்ரீவனும், விபீடணனும் அரசு ஆசைக்காக இராமனிடம் சரணடைந்தவர்கள். ஆனால் அனுமனோ, இராமனே வைகுந்தத்திற்கு அவனை அழைத்தபோது, இப்புவியில் இராமனின் நாமஸ்மரணை செய்வதே இப்பிறவியின் நோக்கம் எனக் கூறிய அனுமனின் பெருமையை என்னென்று புகழ்வது! இராமனால் சொல்லின் செல்வனாகச் சிறப்பிக்கப்பட்டு, எங்கு, எப்படி, என்ன பேசுதல் வேண்டும் என்பதை உணர்ந்து ஒரு சிறந்த ராஜ தூதனாக விளங்கிய அனுமனின் பாத்திரம் இன்று நம்மவர்க்கு ஒரு சிந்தனை ஊற்றாக விளங்குகிறது. செய்த தவறுக்கு வருந்துதல் வேண்டும், கோபத்தை அடக்குதல் வேண்டும் எனும உயர் பண்புகளை மண்டோதரியை சீதையாக நினைத்த பிறகும், இலங்கைக்குத் 'தீ' வைத்த பிறகும் நடந்த அனுமனின் போக்கால் அறிந்து இன்புறலாம். தத்துவ நோக்கில் பார்த்தால் ஜீவாத்மாவான சீதையை பராமாத்மாவான இராமனிடம் இணைக்கும் ஓர் ஆசார்ய புருஷனாக அனுமன் (ஹனுமத் ஸமேன குருணா) விளங்குவதைக் கண்டு மகிழலாம்.

'நவவியாகரண வேத்தா' எனவும் 'சர்வ மந்திர தந்திர யந்திர ஸ்வரூபி' எனவும் அழைக்கப்பட்டு விரைவு, தெளிவு, ஆர்வம், நுட்பம் போன்ற இன்றியமையாத பண்பு நலன்களைப் பெற்று, பக்திக்கு ஓர் இலக்கணமாகவும் தொண்டுக்கு ஓர் உருவமாகவும், நட்புக்கு ஒரு வழிகாட்டியாகவும், பண்புக்கு ஓர் உறைவிடமாகவும் விளங்கிடும் அச்சிறிய திருவடியின் திருவடிகளைப் பணிந்தேத்துவோமாக!

# ★ திருமஞ்சன ஈடுபாடு ★

சேதநர்களாகிய ஸம்ஸாரிகள் எம்பெருமானை பர, வியூஹ, விபவ, அந்தர்யாமி அர்ச்சை என்கிற பல வித நிலைகளில் அனுபவிக்கிறார்கள். இவ்வைந்து நிலைகளிலும் மிக உயர்ந்ததாகப் பேசப்படுவது அர்ச்சாவதாரமேயாம். இதற்குக் காரணம் எம்பெருமான் ஸ்தலங்களில் அடியார்களின் விருப்பத்திற்காகத் தனது பரஸ்வரூபத்தை தாழ விட்டுக் கொண்டு சௌசீல்ய, வாத்ஸல்ய, ஔதார்யத்தாலே எழுந்தருளியிருப்பதேயாகும். இந்த அர்ச்சாவதாரத்தின் பெருமையைக் கூறப் புகுந்த முதலாழ்வார்களிலும் முதல்வரான பொய்கையாழ்வார்,

'' தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்
தமருகந்த தெவ்வண்ணம் சிந்தித்து
இமையாதிருப்பரே அவ்வண்ணம் ஆழியானும்''

என்று அருளிச் செய்துள்ளார்.

இவ்வாறு எழுந்தருளியுள்ள அர்ச்சாவதார மூர்த்திகளிலும் பெரிய பெருமாள் என்றும் நம்பெருமாள் என்றும் போற்றப் பெறும் ஸ்ரீரெங்கனதனின் விக்கிரஹ ரூபத்தை அதி ஸௌந்தர்யமெனப் பேசுவர் ஆழ்வார்கள்.

இத்தகு விசேஷ ரூபமுடைய நம்பெருமாள் தம் அடியார்களுக்குக்கண்ணழகு, நடையழகு, உத்ஸவ அழகு எனப் பலவற்றைக் காட்டி மயக்கச் செய்தேயும் இவையெல்லாவற்றையும்விட அவனின் திருமஞ்சன காலத்திலே தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர் முடி மேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையையுடையவனாய் ஸஹஸ்ரதாரை கொண்டு திருமஞ்சனம் கண்டருளும் அவஸரகதி ஒன்றிருக்கிறதே! அதற்கு ஈடு இணையே இல்லை எனலாம். இதனாலேயே கூரத்தாழ்வானின் திருக்குமாரராகிய ஸ்ரீ பராசர பட்டரும் இந்நிலையில் நம்பெருமாளிடம் மோஹித்து நின்று அழகான பல ஸ்லோகங்களை இட்டருளினார். இவற்றைத் திருமஞ்சன கட்டியம் என்றும் வடிவழகுக் கட்டியம் என்றும் அழைத்து இன்றளவும் எல்லா ஸந்நிதிகளிலும் திருமஞ்சன ஸந்நிவேசத்தில் ஸேவிப்பது வழக்கம். ஸ்ரீ பட்டர் அருளிய இவற்றுள் எல்லாம் மிக சிலாக்யமாகக் கூறப்படுவது 'த்வம்மே ஹம்மே' எனப்படும் ஒரு ஸ்லோகமாகும்.

ஸ்ரீ பராசர பட்டர், திருமஞ்சனக் கோலத்தில் துளப மாலையணிந்து எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலையினை, ஏதோ ஒரு ப்ரமாணம் பண்ணுவான் ஒருவன் நிலைக்கு ஒப்பிட்டு இந்த அழகான ஸ்லோகத்தை யிடுகிறார். அதாவது,

'' த்வம்மே ஹம்மேகுதஸ்தத் ததபிகுத
இதம் வேதமூலப்ரமாணாத்
ஏதச்சாநாதிஸித்தாதநுபவ விபவாத்
ஸோபி ஸாக்ரோச ஏவ |
க்வாக்ரோசஃ கஸ்ய?கீதாதிஷுமம
விதிதஃ கோத்ரஸாக்ஷீ|ஸுதீஃஸ்யாத்
ஹந்த த்வத் பக்ஷபாதீ ஸஇதி ந்ருகல
ஹேம்ருக்யமத்யஸ்தவத் த்வம் ||

இதன் விசேஷ அர்த்தத்தை இங்கே சுருங்கக் காண்போம்.

நம்பெருமாள் தண்ணந்துழாய் அணிந்து திருமஞ்சனங் கண்டருளவித்தமாயிருக்கையைக் கண்ணுற்ற ஸ்ரீ பட்டர் தமக்குள் ஒரு சந்தேகம் பிறக்கிறதாம். லோக விஷயங்களில் இருவரிடையே ஏதேனும் சர்ச்சை ஏற்படுங்காலத்து ப்ரமாணம் பண்ணுபவன், தான் சொல்வது சத்யம் என நிரூபிக்க துளசி மாலை யணிந்து முழுக்குப் போடுவது பிரஸ்துதம். அது போன்று நம்பெருமாள காக்ஷி தரும் அவஸ்யம் என்ன என்று ஆச்சரியப்படுகிறார். உடனே பிறக்கிறது இந்த ஸ்லோகம்.

சேதனன் தன் பிறப்பை உணராது தானிட்ட வழக்காய்த் தனக்குத் தானே தலைவனாய்ப் பாவித்து தன்னுள் உறையும் தனிப்பெருந் தலைவனுக்குத் தான் அடிமை என்பதை அறியாது அக்ஞானத்தில் மூழ்கிக் கிடப்பதைக் கண்ட எம்பெருமான் துக்கிப் பரிதவித்து, ''சேதநா! நீ என்னுடைய சொத்து'' என்கிறார். அப்போதும் சேதநன் அதனை ஏற்காது 'நான் உனக்கு அடிமையல்ல' என்கிறான். அதனைக் கேட்ட எம்பெருமான் 'நீ இவ்வாறு சொல்வதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது' என வினவ அதையே அவரிடம் திருப்பிக் கேட்கிறான் சேதநன். அதற்கு எம்பெருமான் வேத மூலமே ப்ரமாணம் என்று கூற, வேத மூல ப்ரமாணங்கள் அநாதி காலமானதாகையால் அதனை ஏற்றுக் கொள்வாரில்லை என்றும், தனக்கோ ஸ்வாதந்த்ரியம் என்ற முக்கிய அநுபவப் ப்ரமாணம் உண்டென்று சேதநன் விவாதிக்கிறான். சேதநனின் ஸ்வாதந்த்ரியத்தை கீதை முதலானவற்றில் தாம் ஆக்ஷேபித்துள்ளதாய்க் கூறுகிறார் எம்பெருமான். அவ்வளவில் ஸம்ஸாரியானவன், 'நீ சொல்வது சத்யம் என்பதற்கு சாக்ஷி எவரேனும் உண்டோ' என வினவ, ஸம்ஸாரிகள் யாவரும் சேதநன் பக்கலில் இருப்பவர்களாதலாலே முமுக்ஷுக்களைத் தன் சாதியாகக் காட்டுகிறார் எம்பெருமான். முமுக்ஷுக்கள் தனக்குச் சம்பந்தப்பட்டவர்கள் என பகவானே கீதையில் கூறியுள்ளபடியால் அதனைச் சேதநன் ஏற்க மறுக்க, எம்பெருமான் வேறு வழியின்றி, தன் சொத்தாகிய சேதநனை நாம் இழந்து விடுவோமோ என்றஞ்சி, ப்ரமாணம் ஒன்றே கடைசியாக எஞ்சி நிற்க, அதைச் செய்யுமிடத்துத் துளப மாலையணிந்து இத் திருமஞ்சனக் கோலத்துடன் வீற்றிருந்து சேதநர்களின் மதியற்ற எண்ணத்தைத் தோற்கச் செய்யும் படியாய் இருக்கும் இருப்பிது என்று சமத்காரமாகத் தலைக்கட்டுகிறார் ஸ்ரீ பராசரபட்டர்.

திரு. T. T. வரதராஜன்,
B.A., B.Com., C.A.I.I.B.I.
அமைந்தகரை

# அரனுக்குகந்த அரிய கூவிளம்

நமது நாடு ஞானத்திலும், மெய்ஞ் ஞானத்திலும் வளர்ந்து செழித்துள்ள தத்துவச் சோலையாகும்.

இதனைக் கர்ம பூமி என்றும், ஞான பூமி என்றும், தர்மபூமி என்றும் முன்னோர்கள் பாராட்டியுள்ளனர்.

இன்றும் அத்தகைய இயல்புகளில் மிக்கோங்கியே இருப்பதும் கண்கூடாகும்.

உலக நாடுகள் அனைத்தும் தெய்வ தத்துவத்திலும், மருத்துவ ஞானத்திலும் தங்களை ஆய்வில் ஈடுறச் செய்து கொள்ள நமது பரத கண்டத்தையே இலக்காக, வழிகாட்டியாகக் கொண்டுள்ளன என்பதிலிருந்தே நமது நாட்டின் பெருமையை உணரலாம்.

ஆதிமூலனாகிய திருமால் அனைத்தையும் தன் ஆற்றலால் தன்னிடமிருந்தே விளங்கச் செய்ததோடு அவற்றையே தன் உருவாகவும் கொண்டுள்ளான் என்பது வைணவ சித்தாந்தத்தின் முடிவாகும். இங்கும் அங்கும் எங்கும் எதிலும் அது அதுவாக உள்ளவன் ஆதலால் விட்டுணு என்றும் அவனை அழைக்கின்றோம். எங்கும் வியாபித்திருப்பவன் என்பதே அதன் பொருளாகும்.

அவனன்றி அணுவும் அசையாது என்ற அசையா நம்பிக்கை உடையதும் நமது நாடாகும்.

ஒரு புறம் திருமாலை மருத்துவனாகக் காணும் நம்மோர் நெற்றிக் கண்ணனையும் முதல் சித்தனாகக்கண்டு உவந்துள்ளனர். சித்த மருத்துவ மூலன் சிவனே.

அவ்வகையில் இரு மூர்த்திகளும் உலகிற்கு மருத்துவ நலத்தையும், மூலிகைகளின் சிறப்பையும் போதித்துள்ளனர்.

சிவனை வைத்தியநாதன் என்றும் மருந்தீசர் என்றும், குறிப்பிடுவதும் இதன் பொருட்டேயாகும்.

மூலிகைகளில் இதுதான் சிறப்புடையது இதுதான் சிறப்பில்லாதது என்று பகுத்துக் கூறுதல் இயலாததாகும்; எனினும் எது எதனை மேற்கொள்ளுகின்றோமோ அவ்வவற்றை மிகைப்படுத்திச் சொல்வதல்லால் வேறு வழியில்லை. ஒவ்வொரு கோணங்களில் ஒவ்வொன்றும் அரிய ஆற்றலைப் பெற்றவையாக உள்ளமையே இம்மரபுக்குக் காரணம்.

திருமால் உவப்பது திருத்துழாய் என்றால் சிவனார் உவப்பது கூவிளம் என்பதாகும்.

அறத்தை போதிக்கவும், கடைப்பிடிக்கவும், அறநெறிகளை வகுக்கவும் திறன் கொண்டநாடு என்பதனால் நமது நாடு தருமபூமியாயிற்று. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் இயல்பு கொண்டது இந்நாடு. செந்தன்மையே செவ்விய அறமென்பதில் ஐயமில்லை.


கவிஞர். தண்டமிழ்ப்பித்தன்,
சென்னை-94


அறிவு என்னும் ஞானத்தில் சிறந்து மருத்துவ ஞானமும், தெய்வதத்துவ ஞானமும் கொண்டு ஞான பூமியாகி அவற்றையெல்லாம் நேரிய முறையில் செயல்படுத்தவும் தன்னை ஈடுறச் செய்துவருவதனால் கர்மபூமியாகவும் விளங்குகிறது பாரதம் என்பது உலகறிந்த உண்மையாகும். இதனால்,

இறையைக் கண்டோரும், தாமே இறையாக நின்றோரும் ஆழ்வார்கள் எனவும், சித்தர்கள் எனவும், முனிவர்கள் எனவும் விளங்கினர் என்பது தேற்றமாகும். இன்றும் அத்தகைய பண்பினோரைக் காணவும் செய்கின்றோம்.

ஆதி மனிதன் மரத்தையும், மலையையும், நெருப்பையும் வணங்கி வந்ததோடு மண்ணையும், காற்றையும், விணணையும் (நீரையும்), மதியையும், கதிரையும், பாம்பையும் கூட வழிபட்டான் ஆதலால் அப்படி வணங்கப் பெற்ற மரங்களில் வில்வ மரமும் ஒன்றாகும். இதுவே கூவிளம் என்பதாகும். இதற்குக் கருவிளம் என்று மற்றுமோர் பெயரும் உண்டு.

"ஏழிசையாய் இசைப் பயனாய்" என்று வாதவூரடிகளார் தில்லைக் கூத்தன் கைலாய நாதனைப் பாடியது போல் அவனே இசைமயனாய் உள்ளதால், அவ்இசையை எப்பொழுதும் "அசைந்து இசை கோடலின் அசையே, அவ்வசையும் சீர் கொள நிற்றலின் சீரே" என்ற இலக்கணத் திற்கிணங்க தமிழ் மொழியை அகத்தியனுக்குப் போதித்த போழ்து அண்ணலின் தமருகம் ஒலிப்பித்ததும் அதனின்றே மொழி ஒலி எழுந்தது என்பர். அம்மொழியின் இலக்கணத்திலும் யாப்பிற்குச் சீர் வழி கூறிடுகையில் வாய்ப்பாடாக கூவிளம், கருவிளம் என இவ்வில்வமே இடமுறுதலும் சிவனார் உகப்பிற்கு ஏற்றது என்பதை காட்டுவது சிந்திக்கத்தக்கதாகும். தமிழோடு இயைந்து இசையோடு திகழும் பெற்றி இம்மூலிகைக்கே உண்டு.

நெருப்பிடைஆடும் ஆண்டவனுக்கு நெருப்புக்கண உள்ளது போல் நீரும் குளிர் மதியும் அவன் முடிமேல் திகழ்தல் காணுகின்றோம், நீரில் காற்றும் உண்டு என்ற உண்மையை அவனே காட்டுதல் வியப்பன்றோ.

உலகம் வாழ்வதற்கு காற்றும், நீரும், நெருப்பும் இன்றியமையாதனவாகும்.

இவைதாம் நம் உடலில் உள்ள வாதம், பித்தம், கபம் என்பனவாகும். இவற்றை ஒரு நிறையாக இருக்கும் வண்ணம் நாம் நமது சரியை, கிரியை மூலமும், அறிவின் மூலமும் பேணிப் போற்றுதல் வேண்டும். இதனையே,

'' மிகினும் குறையினும் நோய்செய்யும்
நூலோர்
வளி முதலாய் எண்ணிய மூன்று''

என்று திருவள்ளுவரும் எச்சரிக்கின்றார்.

ஏதேனும் ஒன்று மிகுந்தாலும் குறைந்தாலும் துன்பத்தைத் தரும் என்பது கண்கூடு. ஆயினும் நம்மவர்கள் சூழ்நிலைக் கவர்ச்சியினும், பொறுப்பின்மையாலும் உடலினைப் பாதுகாக்கத் தவறி விடுகிறார்கள். அத்தவறினால் ஏற்படும் மிடிகளைக் களைந்து முன்போல் ஆரோக்கியமாக நலமாக உடலினை இயங்க வைத்துக் கொள்ளவே மூலிகைகளையும் அவற்றினால் சமைத்த மருந்துகளையும் நாட வேண்டியது கடமையாகின்றது.

வில்வம், வாத பித்த கபக்குற்றங்களை நீக்கவல்லது என்று சொல்வார்கள். சிவபிரானுக்கு ஒரு வில்வஇலையைப் பூசையில் காணிக்கை ஆக்கினாலே முப்பிறவிப் பாவங்களையும் போக்கிக் கொள்ளலாம் என்பது சித்தாந்தம்,

புராணங்களிலும் இக்கூவிளத்தின் மகிமையை உணர்த்துவதற்குப் பல வரலாறுகள் உள்ளன. அவற்றையும் இங்கு அறிதல் நன்றாதலின் ஒரு சில வற்றைக் கூறுகின்றேன்.

சிவராத்திரி நாளன்று யார் விரதமிருந்து வில்வத்தால் சிவனைப் பூசித்தாலும் எல்லாப் பேறுகளுடன் சிவபதமும் கிடைக்கும் என்பது இறையடியார் கண்ட மெய்ம்மையாகும்.

பகலெல்லாம் காட்டில் திரிந்து வேட்டைக்கு எதுவும் கிடைக்காமல் களைத்துப் போன ஒரு வேடன் இரவு வந்து விட்டதால் தன் இருப்பிடம் செல்ல இயலாது ஒரு மரத்தின் மீது ஏறி ஒரு கிளையில் அமர்ந்தான். அக்கிளையின் மீதே படுத்திருந்தால் தூக்க மயக்கத்தில் தவறிப்போய் தரையில் விழுந்தால் காட்டு மிருகங்கள் நம்மை இரையாக்கி உண்டு விடும் என்ற பயத்தினால் கிளையின் மீதே கண் விழித்திருக்க எண்ணினான். ஆனாலும் களைப்பும் அசதியும் ஒருக்கால் கண்களை நித்திரையில் ஆழ்த்திவிடக் கூடும் என்ற அச்சத்தினால் அம்மரத்தில் உள்ள இலைகளை ஒவ்வொன்றாக விடியும் வரை பறித்துப் பறித்துக் கீழே போட்டவண்ணம் இருந்தான். பொழுது புலர்ந்தது. கீழே இறங்கிய வேடனுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. அங்கே விரிசடை முக்கண்ணர் தோன்றி வேடனுக்கு அளியுடன் அருள பாலித்தார். காரணம் வேடன் ஏறியிருந்த மரம் வில்வ மரமாகும். அவ்விதழ்களை கீழே மரத்தடியில் குடிகொண்டிருந்த இலிங்க மூர்த்தியின் சிலையுருவம் தம்மேல் ஏற்ற ஏற்றமாகும். அதுமட்டுமின்றி வேடன் இரவு முழுவதும் கண் விழித்தும் ஆகாரமின்றியும் இருந்த அந்தப் புனித நாள் சிவராத்திரியாக அமைந்ததுமேயாகும்.

ஏதும் தெரியாமல் நிகழ்ந்த இவ் வேடனின் செயலுக்கே ஆண்டவன் அருள் செய்தார் என்றால் இம்மூலிகையின் மாசறு தன்மையே தன்மையன்றோ!

இம்மரத்தில் மூன்று சக்திகளும் வசிப்பதாகக் கருதுவர். திருமகள் மலைமகள், கலைமகள் இவர்கள் அரச மரத்தில் வசிப்பதாக எண்ணுதல் போன்றே.

இலக்குமி தோத்திரத்தில் கூட 'வில்வத்தில் வசிக்கின்றவளே' எனக் கூறியுள்ளார்கள்.

கோ என்ற ஓரெழுத்துச்சொல்லை நினைக்கும் போது பசுவும், திருமகளும் தன் நினைவுக்கு வருவார்கள். அந்தப் பசுவினிடத்தில் அகப்படும் ஐந்து பொருட்களையும் '' பஞ்ச கௌவியம் '' என்பர். வைதிகச் சடங்குகளில், இந்துக்களின் வழக்காற்றில் புனிதமானதாகக் கருதும் இந்த ''பஞ்சகௌவியம்'' என்பதில் சேர்க்கப் பெறும் பொருட்களில் ஒன்றான கோமயத்திலிருந்துதான் சிவபெருமானால் உயிர்களின் சகல பாவங்களையும் போக்குவதற்காகத் தோற்றுவித்தார் இவ்வில்வமரத்தை என்பது சமய நூல்கள் கூறும் வரலாறு.

கோமய உற்பவம், நிர்பீஜம், சங்கரானந்தம், சுத்த பத்மப்பிரியம், ஈச விருட்சம், வியாதம், புஷ்பாதிகம் யக்ஞக்ஷேத்ரம், அபீஷ்டவாதம், புருஷார்த்த சித்திதரம், சிவப்பிரியம் எனக் கூறும் பல பெயர்கள் வில்வ மரத்திற்கே உரியனவாகும்.

இப் பெயர்களால் கூவிளத்தைப் பூசனை செய்தால் விரும்பிய வெற்றிகளையெல்லாம் எய்துவர் என்பதும் பெயர்களிலேயே காணப்பெறும் பொருள்களே உணர்த்துகின்றன. இம்மரத்தின் நிழல்பட்டாலே புனிதம் ஏற்படும் என்பதற்கும் ஒரு புராண வரலாறு உள்ளது. அதனையும் காண்போம்.

ஒரு கொடுங்கோல் மன்னன், வேட்டையாடிய பின் நிழலைத்தேடி அங்குக்கானகத்தில் கண்ட வில்வமரம் ஒன்றின் கீழ் வரும் போது அம்மரத்தின் அண்மையில் தவமிருந்த முனிவர் ஒருவரின் திருநீறு காற்று வாக்கில் மன்னன் மீது சிதறிப் போய் பட்டு விட்டது. உடனே அரசன் மெய்ஞ்ஞானம் பெற்று தவமுனிவரிடம் தாம் இதுவரை செய்து வந்த பாவங்களைக் களைவதற்கு வழி கூறுமாறு வேண்டினான். முனிவரோ ஒரு வில்வ மரத்தைநிறுவி அதன் நிழலில் வாழ்ந்து வருவீர்களானால் தங்களின் பாவங்கள் பகலவனைக் கண்ட பனி போல்நீங்குவதோடு பிறப்பறுபேறும் பெற்று சிவலோகம் அடைவீர் என்று அரசனுக்குக் கூறினர். அவ்வாறே செய்து மன்னவன் பயன் பெற்றான்.

இதே போன்று கொடும் பாதகங்களையெல்லாம்செய்த மகாபாவியான ஒரு வேதியனும் மார்க்கண்டேய முனிவரின் அருள்மொழிப்படி வில்வ மரத்தடியில் அமர்த்திய சிவலிங்கத்திற்கு வழிபாடு செய்து புனிதம்பெற்றான் என்பதும் வில்வச் சிறப்பிற்குச் சான்றாகும்.

வில்வ மரத்தை பெரும்பாலும் வெட்டுவது அரிதாகும். பண்டைக் காலத்திலேயே ஆயுர்வேத மருத்துவ முன்னோடிகளும், வழிகாட்டிகளுமான வங்க சேனர், பவப் பிரகாசர், சரகர், சுச்ருதர், சக்ரதத்தர் முதலானோர் இக்கூவிளத்தின் மருத்துவ சக்தியை உணர்ந்து கையாண்டுள்ளனர். மூலவியாதிகளுக்கும்,காய்ச்சலுக்கும் சிறந்ததென சரகர் நிச்சயித்தார். குருதி கலந்த சீதபேதியை நிறுத்த வல்லது என சுச்ருதர் பரிந்துரைத்துள்ளார். சக்ரதத்தரோ உடல் நலத்திற்கு மேல் பூச்சாகக் கொள்ளலாம் என்பதோடு, நாட்பட்ட கழிச்சல், சீதபேதி, குருதி மூலம், வாந்தி, நீரேற்றம் ஆகியவை நீங்குவதற்கும் பயன்படும் என்று கண்டார். வங்க சேனரும் பலப்பிரகாசரும் இவ்வாறே கண்டறிந்தார்கள்.

வில்வம் பொதுவாக நம் நாட்டில் எங்கும் வளரக்கூடியது. இமயமலைப் பகுதிகள் சிலவற்றில் கடல் மட்டத்திற்கு ஏறத்தாழ 4000 அடிகள் உயரத்தில் இம்மரங்களைக் காணலாம்.

வில்வ இலைகள் ஒரு காம்பில் கிளைத்து தனியாக இல்லாமல் மும்மூன்றாகக் குழுவாக இருக்கும். பதினொரு இலைகளும் குழுவாக இருக்கும் மரங்களும் உண்டு.

வில்வமலர்கள் தேனின் மணத்தை ஒத்ததான வாசனையைவீசும். பசுமையோடு கூடிய வெண்ணிறமாகக் காணப்படும்.

வில்வப்பழம் வனப்புடன் சாம்பல் நிறம் கலந்ததாக இருக்கும். பகுக்கும் போது சில மஞ்சள் வண்ணம் பெறுதலும் உண்டு.

காட்டு வில்வமரத்தின் காய்களின் மேல் ஓடுகள் கெட்டியானவையாகும்.

மரத்தின் பலகைகள், கட்டைகள் உறுதியானவையும், வழுவழுப்பான பாங்குடையனவும் ஆகும். பலகைகள் கூட மணமுள்ளவையாகும். இழைப்புளியால் இழைத்து மெருகேற்றும் போது வெகு எழிலாகக் காணக் கூடிய மரமாதலால் வீட்டுப் பொருட்களும், கோயில் தேர்களும், மரச் சிற்பங்களும், உழவுக் கருவிகளும், கடைசல் வேலைப்பாடுடைய பொருட்களும், எண்ணெய் ஆலைக்கும், சர்க்கரை ஆலைக்கும் வேண்டிய பொருட்களும், குழவி, உலக்கை, சீப்புக்கள், கைப்பிடிகள் முதலியனவும் இசைக் கருவிகளும் இதனால் செய்கிறார்கள்.

விரிசல் ஏற்படாத வில்வ பழத்தின் மேல் பாகம் மஞ்சள் சாயத்திற்குப் பயன்படுவதோடு இதுவே காலிகோ அச்சிற்கும் உதவுகிறது.

பழத்தின் உட்பாகம் உள்ள கதுப்புக் கூழை சுண்ணாம்புடன் கலந்து உறுதியாகப் பிடித்துக் கொள்வதற்காகக் கிணறு கட்டும்போது உபயோகிக்கிறார்கள். இந்தக்கூழ் அழுக்கை நீக்க வல்லதாகையினால் துணிகளின் சலவைக்கும், "வார்னிஷ்" போலப் பயன்படுத்தவும் உதவுகிறது. "டிரங்க்" பெட்டிகள் தயாரிப்போர் ஒட்டுவதற்குரிய பணிகளுக்கும் இம் மரத்தின் பிசினை மெழுகை அதாவது பசையைக் கையாளுகிறார்கள்.

ஆயுர்வேதத்தோடு, சித்தா, யூனானி, ஹோமியோ, அலோபதி மருத்துவ சிகிச்சைகளிலும் வில்வம் நிகரற்றதாக உள்ளது.

பெரிய வில்வப் பழத்தின் ஓடு அமைந்துள்ளதைப் பார்த்தால் மனிதனின் மண்டை ஓட்டின் கபாலத்தை ஒத்ததாக விளங்கும்.

பழத்தின் கதுப்பிலிருந்து இனிப்புப் பானங்களும், அல்வாவும், லேகியமும் செய்கிறார்கள்.

காய்தனிலிருந்து சூரணமும் செய்கிறார்கள். பல மருந்துகளில் கூட்டாகச் சேர்க்கிறார்கள்.

வெடித்த பழங்களை நல்லெண்ணெய்யில் போட்டு வெயிலில் சூரிய சூட்டில் வைத்து அந்த எண்ணெயை மட்டும் தலை முழுவதற்குப் பயன்படுத்தி வந்தால் சிரசில் ஏற்படும் சூடு தணியும், கண்களின் ஒளி அதிகமாகும், புத்தித்தெளிவும் ஏற்படும்.

இலைகளைக் கண் வீக்கங்களுக்கு சூட்டில் வதக்கி ஒத்தடம் கொடுப்பதுண்டு.

பூ, பட்டை, வேர் முதலியனவும் மருத்துவத்தில் துணை செய்கின்றன.

வீடுகளில் கை மருத்துமாக இடம் பெற்றுள்ள மாண்பும் வில்வத்தின் சீர்மைக்கு எடுத்துக் காட்டாகும்.

இதய நோய்களிலும், குடல் சம்பந்தமான உபாதைகளிலும் வில்வ வேரின தொண்டு விளங்குகிறது.

பல் வியாதிகளில் கண்டங் கத்திரியுடன், முதிர்ந்த வில்வக்காயையும் சேர்த்துக் காயவைத்து இடித்துச் சூரணித்து சிறிது கற்பூரம் தூள் செய்து கலந்து வைத்துக் கொண்டு தினசரி பல் துலக்கி வந்தால் முக வசீகரமும், திருமகள் அருளும் பெருகும். பற்கள் உறுதிப்படும். வியாதிகள் நீங்கும்.

இதனையே உடலில் பூசி, சிறிது நேரம் வெய்யில் படும்படி இருந்து தினசரி குளிப்பதால் சரும ரோகம் குணமாகும்.

பூக்கள் குழந்தைகளின் மாந்தத்தை நீக்கும்.

வில்வப் பழம், கசப்பு வெட்பாலை அரிசி, சோம்பு, கடுக்காய் இவற்றை சம பங்கு எடுத்துக் கொண்டு (கடுக்காயின் உள்ளிருக்கும் கொட்டையை

நீக்கி விட்டு பட்டை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும்) எல்லாவற்றையும் தூளாக்கி அத்துடன் மூன்று பங்கு சர்க்கரையைச் சேர்த்து மீண்டும் நன்றாகத் தூள் செய்து இறுதியாக இசபகோல் விதைத் தூளும் கலந்து வைத்துக் கொண்டு ஒரு சிட்டிகை முதல் மூன்று சிட்டிகை வரை உட்கொண்டால் சீதபேதி குணமாகும்.

சூட்டினால் ஏற்படும் கோளாறுகளுக்கு வில்வ இலையைப் பறித்து கியாழம் வைத்து அரை சங்கு வீதம் சிறிது தேன் அல்லது சர்க்கரை கலந்து உட்கொள்ளலாம்.

காய்ச்சலுக்கும், இரத்தக்கொதிப்பிற்கும் இதய பலமின்மைக்கும், கண் எரிச்சல் மயக்கம் முதலியனவற்றிற்கும் கூட இதனையே மருந்தாக உட்கொள்ளலாம். இரத்த சுத்தியும் ஏற்படும்.

இறுதியாக மற்றொன்றையும் சொல்ல விரும்புகின்றேன். அதாவது மந்திர சக்தி இம்மரத்தில் மிகுதியாக உள்ளது என்பதாகும். மாந்திரீகர்கள் இவ்வுண்மையை அறிந்துள்ளார்கள்.

இதன் வேரையும், அருகம்புல் வேரையும் சிறிது எடுத்து இறைவன் முன்வைத்து பூசனை செய்து அதனை தாயத்துக்களில் அடைக்கலம்செய்து கட்டிக் கொண்டால் எல்லா செயல்களிலும் வெற்றி கிட்டும் என்பது அவர்கள் கண்ட உண்மை.

மற்றொன்றும் இதற்குக் கூறுகிறார்கள். சிவனின் மூத்தமகனாரின் அதாவது விநாயகரின் அருளும் கூடுமாம்.

இவற்றையெல்லாம் நோக்கும் போழ்து வில்வம் தெய்வீகப் பணிகளிலும், இசை, சமூகம், மருத்துவம் ஆகிய எல்லாவற்றிலும் தன்னை ஈடுபடுத்தும் சிறப்பை வாழ்த்தி வணங்குதல் மாந்தரின் கடன் என்பதில் மறுப்பொன்றுமில்லையல்லவா!

★

# பெரிய உடையார்

ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ம்ப்ரதாய மரபில் 'பெரிய' என்ற அடைமொழி மிகவும் சிறப்புடையது. பரம விலக்ஷணமானது. இஃது உயர்வு, பரப்பு, பெருமை, இனிமை, பரிவுகளின் மிகுதிச் சிறப்பைக் காட்டுவது. இச்சொல்லை நம் பூருவாசாரியர்கள் எடுத்து ஆண்டிருக்கின்ற பெற்றி உய்த்துணர்ந்து இன்புறற்பாலதொன்று. பெரியாழ்வார், பெரிய உடையார், பெரிய முதலியார், பெரிய திருமொழி, பெரியதிருமந்திரம், பெரிய கோயில் என்றிங்ஙனே ஒவ்வொரு இடத்திலும், இவ அடைமொழியின் சொல்லாட்சி நுண்மாட்சியுடைதது. 'பெரிய' என்ற அடைமொழியை பொங்கும் பரிவு மிக்கிருக்குமிடத்திற்கே ஆக்கியுள்ளர் என்பதைக் காணபோம்!

மற்றுள்ள ஆழ்வார்களுககு முன்னே வந்துதித்து, நற்றமிழால் நூல் செய்து நாட்டையுய்த்த பெற்றிமையோரான முதலாழ்வாரகளையும் பெரிய என்ற அடைமொழிமை இட்டு அழைத்தாரில்லை. நூல் அளவாலும், நூல் வகையாலும் அதிக பிரபந்தங்கள அருளிய திருமங்கை ஆழ்வாருக்கும இநத அடைமொழி பெறறு, பெரிய திருமொழி என அமைககப்படுகிறது. பிரபன்ன ஜன கூடஸதராய் ஆழ்வார்களையெல்லாம அவயவங்களாய, தான் அவயவியாய் திகழும் பரமாசார்யரான நமமாழ்வாருக்கும இந்த அடைமொழி கிட்டிற்றில்லை. பரமாசார்யரும் கலியும் கெடும் கணடு கொண்மின் என்று ஆழவாராலேயே பவிஷ்யத் அவதார ஸூசனம் செய்யப்பட்ட பெருமையுடையவரான ஸ்வாமி, எம்பெருமாஞரும் இவ்வடைமொழியால் அழைக்கப் பெற்றாரில்லை. ஆயின் இவ்அடைமொழியை நம் பூர்வாசாரியர்கள பொங்கும் பரிவுச் சிறப்பிற்கே விசேஷமாக இட்டு அது உடையோரையே இவ்விசேஷணத்தால் அழைததிருக்கும் சீர்மையினை இங்குக் காணபோம்!

ஆழ்வார்கள் அனைவரும் மங்களாஸாசனபரர்கள். என்றோ நடந்த எம்பெருமானுடைய வீர சேஷ்டிதங்களுக்குத் தோற்று, நெக்குருகி, நிலை குலைந்து, என்றோ நிகழ்ந்த நிகழ்ச்சி தானே என்று ஆறியிருககில்லாதே, வயிறு பிடித்து மங்களாஸாசனம் செய்வது இவர்களுக்கே உரிய பணபாம். இப்பணயில் மற்ற ஆழ்வார்களை அஸத்கல்பமாக்கும்படி பேரன்பு மிகுதியால் ஸாவசக்தியான எம்பெருமானுககே மங்களாஸாசனம் செய்த பெருமை ஸ்ரீ விஷ்ணுசித்தர் என்ற ஸ்ரீ வில்லிபுத்தூர் பட்டர்பிரானுக்கே உரியது. ஆகையால் இவர் பெரியாழ்வார் எனப்பட்டார். காலாதீதமான திருநாட்டிலிருந்து காலம் ஆட்சி செய்யும் கொடுமை மிக்க இவ்வுலகில் பாவியாகளுக்கும், வஞ்சகர்களுக்கும், எமபெருமானையே இல்லை செய்கின்ற கொடியவர்களுக்கும் காணும்படி அவர் தம் கணகளுக்கு இலக்காகும்படி தோன்றுகிறதே என்றும, இவ்வழகுக்கு என வருமோ என்றும் வயிறு பிடித்து, எம்பெருமானுக்கே பல்லாண்டு பாடி மங்களாசாஸனம் செய்தாரனறோ. நம கொடிய கணகளுக்கு இலக்காஞர்படுவது நாமறிவம. அதனல்தான் கற்பூரம் ஏற்றி கண்ணெச்சிற்படாமல் காக்க அழகுக்கோல் அர்ச்சாவராதங்களுக்குககாப்பிடுகிறோம். மணவாள மாமுனிகள் உபதேசரத்தின மாலையில் பெரியாழ்வாருக்கு இவ்அடைமொழியை இட்டருளிய பூர்வாசார்யர்களின் உள்ளக்கிடக்கையை தெள்ளென அருளிச செய்யும் பாங்கினைக் காண்போம்!

மஙகளா சாஸனததில் மற்றுள்ள வாழ்வார்கள
தஙகளார் வத்தளவு தானன்றில்— பொஙகும
பரிவாலே விலலிபுத்தூர் பட்டர்பிரான பெற்றார்
பெரியாழவா ரென்னும பெயர்.

பட்டர்பிரானின் பொங்கும பரிவே அவருக்கு பெரியாழ்வார் என்ற பெயரை அளித்தது என்கிறார். மககள் தூாகதி காணமாட்டாதே பரிவின் மிகுதியால் அவர்களை உய்விக்க மறைத்தும் சூளுறவு கொணடும், பிறர் காது படாதே அந்தரங்கமாய் சொல்லி வநது அர்த்தங்களை ஏற்படுத்தி இனிய தெளிய வியாக்யானங்கள் அருளிய பெருமையாலேயே கிருஷ்ணஸூரியும், மாமுனிகளும் பெரிய ஆச்சான்பிள்ளை எனறும் பெரிய ஜீயர் என்றும் முறையே அழைக்கப்பட்டனர். மற்றோரிடம் காண்போம. இதிகாச ஸ்ரேஷ்டமான ஸ்ரீ இராமாயணத்தில் ஸ்ரீ ஜடாயு மிகச் சிறநத பாத்திரம், இவர் மின்னல் போல் தோன்றி மறைகிறார். ஆயினும் இவர் நம் மனத்தில் நிரந்தரமான இடத்தையும் பெற்று விடுகிறார். இவர் முடிவை இராமபிரானே "தெய்வ மரணம்" என்று போற்றுகிறான். இவர் யார் காண்போம.

கொட்டையூர் தம்பு
ப. கிருஷ்ணசாமி

இவர் கழுகரசா சம்பாதி என்பவரின் இளவல். பேராற்றல் மிக்கவர். ஓங்கி உயரப்பறக்கும விரைவினர். மிக வலுவினர். தெயவாபசம பெறறவர். பலப்பல காதங்கள அப்பாலுள்ள சேய்மைப் பொருட்களைத் துல்யமாகக் காணும் திருவடிச் சிறப்புடையவா. கோசல வேந்தன் தயரதனிடம் நட்புரிமை பூணடவர். அவராலேயே தம்பி என்று அபிமானிக்கப்படும் பெற்றியை உடைய

வர். ஸ்ரீஇராமபிரானிடம் கொள்ளை யன்பு கொண்டவர்; சாலப்பரிவினர். ஸ்ரீ இராமபிரானால் சிறிய தந்தை யாகவே ஏற்கப்பட்டு அன்புடன் போற்றப்படுபவர். இவர் தெய்வ மரணம் எய்திய வரலாற்றினைக் காண போம்! இராம லக்ஷ்மணர்கள் சீதை யின் தூண்டுதலால் பொன்மானின் பின்னே சென்றனர். சீதை தனியே பர்ணசாலையில் இருந்தாள், இவ்வாறு உள்ள ஒரு சமயத்தை எதிர் பார் திருந்தவனும், மாரீசனைக் கொண்டு திட்டமிட்டு இச்சதியை நிகழ்த்திய கொடியோனுமான இராவணன் மாய சந்நியாசி ரூபத்துடன் சீதையை கவர்ந்து கொன்றான். சீதை துடி துடித்துத் தன்னைக் காப்பார் யார் என்று பதறி அரற்றினாள். இவளது அபயக்குரலைக்கேட்ட ஜடாயு அவளைக் காத்து, மீட்க ஓடோடி வந்து இராவணனுடன் கடும்போர் செய் தார்.

"சரணெனக்கு யார்கொல் என்று சானகி அழுது சாம்ப அரணுனக் காவன் வஞ்சி அஞ்சேல்" என்று ஓடோடி வந்து போர் செய்து தெய்வ மரணம் எய்தியதைக் கவிச் சக்ரவர்த்தி கூறுவதைக் காண்க. இவர் இராவணனைப் பலவாறாகத் தாக்கி, துன்புறுத்தி, சீதையை மீட்க ஆற்றிய சாகஸங்களால் நலிவுபட்டு அவள் வருந்தினாள். இராவணன் இவரை வெல்ல வகையறியாது திகைத்தான். வேறு வகையின்றி சங்கரன் கொடுத்த சந்திரஹாஸம் என்ற வீரவாளை எடுத்து வஞ்சனை யாக ஜடாயுவின் மேல் வீசி இறக்கை களை வெட்டி வீழ்த்தினான். ஜடாயு குற்றுயிர் ஆனார். பெற்றேன் பிழைத்தேன் என சீதாபிராட்டியை யும் எடுத்துக் கொண்டு விரைவிலே இலங்கை புக்கான்.

மீண்டு வந்த இராமனும், லக்ஷ்மண னும் பர்ணசாலையில் சீதையை அங்குக் காணாது வருந்தினர். அங்குக்காணாத நிலையில் தன் உயிரையே முடித்துக் கொள்ள எண்ணினான் இராகவன். "மரமே பிராட்டியைக் கண்டனையா? செடியே பிராட்டியைக் கண் டனையா?" என்று சித்தம் நெகிழ்ந்து மதி மயங்கிக் கதறலானான். லக்ஷ்மண னுடைய ஆறுதல் மொழிகள் அவ னுக்கு ஆறுதல்அளிக்கவில்லை. தேடிக் கொண்டே வந்த இருவரும் ரத்தத் துளிகளைக் கண்டு கலங்கினர். சீதையை யாரேனும் அரக்கன் ஒரு வன் கொன்று உண்டிருப்பானோ என்று துடித்தனர். அருகிலேயே உடைந்த படைக்கலங்களையும் கண் டனர். அவர்கள் எண்ணம் உறுதிப் பட்டது. சற்று தூரத்தில் கழுகு அரசன் படுத்திருப்பதைக் கண் டனர். இவன் ஓர் அரக்கன் போலும். இவனே பிராட்டியைக் கொன்று உண்டிருக்க வேண்டும் என வெகுண்டு அருகே சென்றனர். அங்கே கண்ட காட்சி அவர்களை நெக்குருகச் செய்தது. குற்றுயிரும், குறைவுயிரு மாய்க் கிடந்த ஜடாயு இராமனை 'குழந்தாய்' என விளித்து மெல்லிய ஸ்வரத்தில் 'உயிர் கொடுக்கும் நல் லோஷதியை பெருங்கானத்தில் தேடு வாரைப் போலே இவ்வனத்தில் பிராட்டியைத் தேடும் என் மகனே நீ நீடு வாழ்வாயாக! என்னுயிரை யும், பிராட்டியையும் இராவணன் ஒருங்கே கவர்ந்து சென்றான்" என்று கூறிச் சாய்ந்தார். இராகவன் அவ ரைப் பார்த்து 'எந்தையே உம் முடைய ஈமக்கடன்களை யான் செய் வேன். நீர் உத்தமோத்தமான லோகத்தை அடைவீராக' (கச்சலோ காம் அநுத்தமான்) என்று கூறி ஈமக்கடன்களைத் தனயன் என்ற முறைக்கேற்ப ஆற்றினான். ஜடாயு வும் தெய்வ விமானத் தேறி வீட்டுல கம் அடைந்தார்.

இராமன் வார்த்தை தவறாதவன். அவனுக்குச் சிறப்பு ஒரு சொல், ஓர் அம்பு, ஒரு மனைவி என்பது. சீதையை விட்டுப் பிரிந்தால் ஒரு க்ஷணம் கூட நான் ஜீவிக்க மாட்டேன். (ந ஜீவே யம் க்ஷணமய) என்றும், கரையில் எறியப்பட்ட மீன் துடித்து க்ஷண நேரத்தில் மடிவது போல் விரையில் மடிவேன் என்றும் கூறிய இராம பிரானின் மெய் விரதம் இருந்தவாறு எங்ஙனே? சொன்ன சொல்லை முடித் திலனே எனமு சங்கிப்பாரும் உளர். உண்மையிலேயே இராகவன் சீதை யின் பிரிவினால் முடியும் தருவாயில் தான் இருந்தான். அவனை உயிர் தரிக்கச் செய்தது ஓர் அற்புதம். அஃது ஜடாயுவின் மங்களா சாஸனமே. இதுவே அவனை உயிர் தரிக்கச் செய்தது.

**ओषदीमिव आयुष्मन् अन्वेषसि महावने।**
**सादेरि मम च प्राणां रावणेन उभयं हृतं ॥**

ஸ்ரீராமபிரான் மதியிழந்து செய லிழந்து நின்ற நிலையினைக் கண்டு இறந்துபட்டால் என் செய்வது என்று அஞ்சியன்றோ ஆயுஷ்மன் என்று விளித்தது. உயிரளிக்கும் ஒஷதி போன்ற பிராட்டியைக் கவர்ந்து சென்று விட்டான் கயவன். அவளைத் தேடி கிடைக்காத நிலையில் உயிர்தரிக்க வல்லனோ என்று அதி சங்கித்து உளமார குழந்தாய் எல்லை யற்ற ஆயுட்காலம் நீ வாழ்க என மங்களாசாஸனம் செய்தருளினார். இவருடைய மங்களாசாஸனம் பலமே இராமனை உயிர்தரிக்கச் செய்தது என்பர் ஆன்றோர். இன்றேல் பின் னுள்ள காண்டங்களுக்குப் பிர ஸக்தியே இருந்திராது போயிருக்கும். ஸ்ரீ இராமாயணத்தில் ஸ்ரீ இராம பிரானை ஆயுஷ்மன என்று பெற்ற தந்தையோ கோசலையோ மங்களா சாஸனம செய்யவில்லை. இப்பேறு இம்மஹாத்மாவுக்கே கிட்டிற்று.

வானர வீரர்களிடம் இராமபிரான் இந்நிகழ்ச்சியைக் கூறும் பொழுது மனம் நெகிழ்ந்து "சரணெனக் கார் கொலென்று சானகி யழுது சாம்ப அரணுனக் காவன்வஞ்சி அஞ்சல் என்று அருளின் எய்தி மரணுடைக் கொடியோன் கொல்ல மொய்யவர் முடித்துத் தெய்வ மரணம் என் தாதை பெற்றது என் வயின் வழக் கன்றோமோ' என்று கூறுகிறான். தன்

னுயிர் நீத்தும் சரணடைந்தாரைக் காத்தல் கடன் என்று என் தந்தை நேற்று செய்து காட்டினனே அதை மறக்க முடியுமா? நான் வீடணனைக் காத்தலுறுதி என்கிறான். கழுகரசன் என்றோ ஜடாயு எனறோ கூறாது 'என் தந்தை' என்று கூறுதல் காணக. இராமபிரான் அவரை சிறிய தந்தை யாகவே மதித்துப் போற்றி வந்தான் என்று முன்பே கூறினம். தனயன் என்ற முறைக்கேற்ப அவர்க்கு ஈமக் கடன்களை ஆற்றினன். தந்தைக்கு, தாரம், தனயர் ஆகியோர் உடைமைப் பொருளாவர் என்பது மனு வாக்கு. இவ்வுடைமைகளை உடைய வராதலால் தந்தை உடையார் எனப் படுவர். 'ஸ்வம்'ஐ உடையவர் ஸ்வாமி. ஸ்வாமியான தந்தையை உடைமையாளா அல்லது உடையார் என அழைத்தல் மரபு. தந்தை என்பதும் உடையார் என்பதும் பர்யாயச் சொற்கள். ஒரு பொருள் சொற்கள். ஆக சிறிய தந்தையான ஜடாயு 'சிறிய உடையார் ஆனர்' அவரது பொங்கும் பரிவு, மங்களா சாஸனச் சிறப்பு காரணமாக இவரை நம் பூருவாசாரியாகள் 'பெரிய உடையார்' என்றே அழைத்துப் போந்தனர்.

மந்திரங்களில் சிறந்தன வ்யாபக மந்திரங்கள். அவை மூன்றனுள் திருவஷ்டமகஷரம் சிறந்தது. இஃது பொருட் சிறப்பாலும் பயனளிகசும். உயர்வாலும் உயர்கதிக்குற்ற ஒரே உபாயமான தன்மைகளால் பெரிய என்ற அடைமொழி பெற்று பெரிய திருமந்திரம் எனபபடுகிறது.

'காட்டினன் திருவரங்கம் உய்பவருக்கு உய்யும் வணணம்' என்று ஈராடிடைப்பட்ட திருவரங்கத்திலே உய்யும் ஓர் உயிர் கிடைக்காதா என்று பரமகிருமையாலே படுகாடு கிடக்கிறுறென்பர். பெருமாளாலே ஆராதிக்கப்பட்ட பெருமாளாகை யாலும் குருபரம்பரை முதல்வனுகை யாலும் தானே சிஷ்யனும், ஆசார் யனுமாய் பிறவிப் பெருங்கடல் நீத்தற்கு பெரிய திருமந்திரத்தை வெளியிட்டுள்ளதை சீர்மையினலும் பெரிய என்ற அடைமொழி பெற்று பெரிய பெருமாள் என அழைக்கப்படுகிறுர்.

க்ருதாமாத்திர பிரசன்னுசார்யரும் யமுனைத் துறைவர்க்கே அற்றுத் தீர்ந்த பரமசிஷ்யனும் ஆன எம்பெருமானரை யமுனைத் துறைவர் திருவடிகளில் சேர்ப்பிக்காதே தானே திருவிலச்சினை அருளியது, உயிரின் நிலையாமையையும், எம்பெருமானரின் பேரார்வத்தின் துடிப்பினையும் கண்டு அன்பு வெள்ளம் ஓட கருணையாலே மந்திரோபதேசம் செய்தருளினர். ஆகையினுல் அவருக்கும் ஆசாரியரானர். ஆளவந்தாரிடத்து நேரடித்தொடர்பு அற்ற போது தன் வழித்தொடர்பினலே அதனை ஈடேற்றினர். இப்பரிவு காரணமாக பெரிய நம்பி என்று அழைககப்பட்டார்.

ஆழ்வாருக்கு அடுத்தபடியாக பிரபன்ன சந்தானத்திற்கு ஊற்றுவாயாகவும், யோகத்திலே ஆழ்வாரை சாக்ஷாத்தரித்து, பணம் கிடக்க மனம் புனராதே, ஆழ்வார் அருளிச் செயல்களை அழிந்து போகின்ற மக்கள் வாழ்விற்காக இசை கட்டியும், தானம் வழங்கியும், தாரணியோர்க்களித்த பொங்கும் பரிவே இவர்க்குப்பெரிய முதலியார் என்ற பெயரைத் தந்தது. பெரிய என்பது தன்னளி பற்றி முதலியார் என்பது குருபரம்பரை முதல்வன் என்பது பற்றி.

கைங்கர்யஸ்ரீயில் தலை சிறந்த கருத்மானை பெரிய திருவடி எனன லும், ஆஸ்ரிதலக்ஷணத்திற்கு அவன் காட்டும் பரிவேயாம்.

இவ்வாறு சொல்லாற்றலறிந்து உரிய இடத்தே உரிய பொருளில் இவ்அடைமொழியை அழகுபட விநி யோகித்திருககும் மேதாவிலாஸம் நம் பூருவாசார்யர்களுக்கே உரியது.



## ஸ்ரீ கபிலேஸ்வர சுவாமி கோயில், திருப்பதி.

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாமா அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

வானியல் மேதையும், ஜோதிஷக் கலையின் சர்வ நுணுக்கங்களையும் அறிந்த பேரறிஞருமான ''வராஹமிஹிரர்'' ராகு கேதுக்களை க்ரஹங்களாகவே கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. அவை வெறும் நிழல்கள் என்றும், அவை போன்ற சாயைகள் வான மண்டலத்தில் கணக்கிலடங்காதவை உள்ளன என்றும், அவைகள் ஜீவிதத்தில எந்த ஒரு பெருத்த மாற்றத்தையும ஏற்படுத்த முடியாதென்றும கூறுகிறார்.

ரிகவேதத்தை ஆராய்ந்தால், ஸவர்பானு என்ற அரக்கன், தான் பெற்ற அளவுகடந்த வரபரசாத பலத்தின வலிமையால் தனது அசுர மாயை கொண்டு இருளைப்பரப்பி விட்டு - சூர்யனை மறைததததாகவும் இநத தத்துவத்தை ஆத்ரேய வம்சத்தில் தோனறிய மகரிஷிகள் நன்கு உணர்ந்திருந்தனர் என்றும் கூறப் பெற்றுள்ளது.

சநதிர வீதியும், சூர்ய வீதியும் சந்திக்கின்ற பாத ஸ்தானங்களில் ஒன்றே ராகு என வானியல் நூலகள் கூறுகின்றன.

சுமார் 27 நாட்களுக்கு ஒரு முறை சந்திரன் இந்தப் பூமியைச்சுற்றி வருகிறது. இதுபோல் சுற்றி வரும்போது சுமார் 495 நாட்கள் ஆனதும் சந்திரனின் வடபாகம் (*North Nove*) சூரிய பாதையில் அபஸவ்யமாக (*Anticlockwise*) ஒரு விளைவை ஏற்படுத்துகிறது. இந்தக் கணக்கைக் கவனிததுப் பார்த்தால், இநத விளைவு சுமார் 1½ வருஷத்துக்கு ஒரு முறை ஏற்படுவது நமக்குத்தெரியும். இதனையே ராகு கேதுப் பெயர்ச்சி எனகின்றனர்.

நவக்ரஹங்களில் சனிக்கும் செவ்வாய்க்கும் என ஒருவித தனித்தன்மை உண்டு. அந்த இரணடின் தனமைகளில் ஐம்பது சதவிகிதத் தன்மையோடு, எந்த இடத்தில், எந்த ராசியில், எந்த பாவத்தில் இந்த ராகு கேது அமர்கின்றனரோ

# ராகு

அந்த ஸ்தான விசேஷத்தையும் கொண்டு விளங்குவர் என'ஜ்யோதிஷ ப்ரபஞ்சம்' என்ற க்ரந்தத்தின் ஆசிரியரான அமரர் ஸ்ரீ உ.வே. நடாதூர் வேங்கடாசார்ய ஸ்வாமியின் சித்தாந்த நிர்ணயம் கூறுகிறது.

ஒரு நபரின் ஜாதகத்தில் லக்னத்துக்கு ஐந்தாமிடத்தில் ராகு இருந்தால் புத்ர தோஷமும், ஏழாமிடத்தில் இருந்தால் களத்ரதோஷமும் ஏற்படுகிறது. இந்த சர்ப்ப தோஷ சாந்தியும், நிவ்ருத்தியும் மிக விரிவாகக கூற வேண்டிய ஒன்றாகும்.

அபமருத்ய தோஷம், விஷம் சாப்பிட்டுத் தற்கொலை செய்து கொள்ளுதல், விஷம் ஊட்டப்பட்டுக் கொலை செய்யப்படுதல், ராஜ பிளவை ஏற்படுதல், *Lenkamia* என்றும் *Blood cancer* என்றும் கூறப்படுகின்ற ரத்த புற்று நோய் உண்டாதல், பாம்பு கடித்து மரணமேற்படுதல் போன்ற அசம்பாவிதங்களுக்கு இந்த ராகுவே காரணமாகும்.

பைடீநஸ குலத்தைச் சேர்ந்த இந்த ராகு ஒரு ஜாதகத்தில் ஜீவனஸ்தானத்தில் இருந்து வலு


ஜோதிஷ விசாரதை
வி பிச்சையய்யர்மாள்
பாண்டிச்சேரி.


வாகவும அமைநதுவிட்டால் பாம்பு களால் பெருத்த வருமானத்தை அடைபவராகவும், விஷ மருந்து உற்பத்தி மற்றும விற்பனையால பெரும் பொருள் ஈட்டுபவராகவும் விளங்குவர். க்ரஹண காலத்தில் யம மந்திரத்தையும் ராகு மந்திரத்தையும் ஜபித்து சித்தி பெறறு வைத்துக் கொணடால், யாரை பாம்பு கடித்திருநதாலும் ஆச்சர்யகரமான முறையில் விஷத்தை இறக்கி விட அவரால் முடியும்.

ஒவ்வொரு க்ரஹத்துக்கும உரிய சமித்துகள் இருப்பதுபோல் ''ராகு'' வுக்கு உரியது 'அருகம்புல்'. இந்த அருகம்புல் அடர்நதும், நிறைந்தும் இருக்கும் இடங்களுக்கு அருகாமையில் பொதுவாக பாம்பும் இருக்கும, கீரியும் இருக்கும்.

பாம்பை எதிர்த்துப் போராடி, அதனிடம் கடிபட்டாலும் விஷம ஒன்றும் செய்யாமல் 'கீரி' பிழைத்துக் கொள்ளும் மர்மம ராகுவுக்குப் பிரீதியான இந்த அருகம்புல்லில் தான் உள்ளது.

எந்த விஷக்கிருமியும் வளர ஒட்டாமல் தடுக்கும் ஆற்றல் இந்த புல்லுக்கு உணடு. அதனால்தான் சாணியைக்கூட, பிள்ளையார் எனறு பிடித்து வைத்து அதன் தலையில் அருகம்புல்லை செருகியவுடன் அந்த சாணிக்கு ஒரு தனி மகிமை ஏற்படுவதோடு, அந்த சாணியில் எநதக் கிருமியும வளர முடியாமல் காய்ந்து உலர்நது போகும; இதே ராகுவின சமித்தான அருகை சம்பந்தம் கொள்ளாமல் சாணி ஓரிடத்தில் இருந்தால் ஈயும், கிருமியும் சேர புழுத்து நாற்றம உணடாகும்.

பாமபு கடித்தால் அந்த இடத்தைக் கீறிச் சிறிது ரத்தம்வடிந்தபின் அநதக் கடிவாயில் கோமூத்ரம்விட்டு அரைத்த அருகம்புல்லை வைத்துக் கட்டிவைக்க விஷம் விலகும். விஷம் அதிகம் ஏறி, பல்கிட்டிவிட்டு, உடல் நீலம் பாரிக்கத் தொடங்கினால் பாம்பினால் கடிபட்ட அந்த மனிதரை வாழைப் பட்டைகளின மேல் வஸ்த்ரமின்றி படுக்கப் போட்டு, ராகு மந்த்ர ஜப உச்சாடனத்துடன் ராகு வைத் தியானித்தால் கிட்டிய பற்கள் தாமே விலகும், பிறகு அருகம்புல்லை பசுவின் கோமயத்தில் அரைத்து அந்தக் கரைசலை வாயில்விட்டு அருநத வைத்தால் விஷம் முறிந்து மீணடும் ஸ்வாசம் நேர்படும். காச்யபர் அருளிய ராகு ஸதோத்ரமும் ராகு கவசமும் பாராயணம் செய்தால் விஷ பீடை அணுகாது; ஸர்வ பீஷ்ட சித்திகள் ஏற்படும். ★

# ★ திருவேங்கடமலை வரலாற்று மாலை ★

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

தொடர் நூல்:

**ஸ்ரீகோவிந்தராஜனுடைய உருவ அமைப்பு முதலியன**

ஸ்ரீஹரிவமசம் பவிஷ்யபர்வம் இருநூற்றுமூன்றாம் அத்தியாயம் பௌஷ்கரனது (பிரமனது) தோறற முறைககும கெட்டததில் – பெருங்கடலில் பள்ளிகொளளும் நாராயண பகவானுக்கு, இடையூறாக மதுவென்னும் பெரிய அசுரன் தமோ குணத்தோடு உணடானான். அவனுக்கே உதவி செய்யுமவனாகக் கைடபனென்னும் வேறோர் அசுரன் ரஜோகுணத்தோடு உணடானான் – என்றிது முதலாக மதுகைடபவசுரர்களுடன் சநதிப்பும், அதன் பிறகு அழகுடையவனாய்ப் பல யோஜனைகள பரநத திருமேனியுளளவனாகப பளளிகொணடருளுமவனும், பிரமதேவன் வீற்றிருந்த திருநாபிக கமலமுடையவனும் இருடீகேசனுமாகிய திருமாலை அவ்வசுரர் இருவரும வணங்கிக் கூறினர் என்று மதுகைடபரால் வணஙகப்படும் தன்மையும், அதறகுப் பின்பு உத்தமவசுரரான அவ்விருவரும கொழுததவாகளாய்ப் போா செய்ய விரும்பிக கோபித்துக் கணகள் சிவககப் பெற்றுக கொடியவர்களாய் அங்குப் பிரமமதேவனைக் கணடு, ‘வெள்ளைத் தலைப்பாகையணிநது நான்கு முகங்களுடன் கூடித்தாமரை மலரின் நடுவில் இருக்கும் நீ யார்’? என்று வினவியது காண்கின்றபடியினால் நான்முகன் வீறறிருக்குமிடமான திருநாபிக் கமலமுடைமையும் அறியப்படுவதனாலும், பாற்கடல் நாதனை திருமாலுக்கும் பூமிதேவிக்கும் நடந்த ஸம்பாஷணையாக அமைந்த ஸ்ரீவிஷ்ணு ஸ்மருதியின் முதலாமத்தியாயததில் = ஆதிசேஷனாகிய பாம்பின் படங்களிலுளள மணிகளின் பேரொளியினால் இது இன்னதென்று ஊகித்து அறிய முடியாத திருமுகக் கமலமுடையவனும் நூறுசநதிரரோடு ஸமானமானவனும் பதினாயிரம் சூரியரோடு ஒத்த காநதியையுடையவனும் பொன்னாடை அணிநதவனும், நவரத்தினங்களினாலும் அலங்கரிக்கப் பெறறவனும், கணகள் கூசுவதனால் பார்க்க முடியாதவனும் சூரியன் போன்ற கிரீடத்தினாலும குண்டலங்களிரண்டினாலும் அணிசெய்யப்பெற்றவனும மெல்லிய கரஙகள் கொணடு மலர் மகளால் பிடிக்கப் பெற்ற திருவடியினையுடையவனும் தேகமெடுத்து வந்த (சங்கு சககரம்) ஆயுதங்களினால் சுற்றும் ஸேவிக்கப் பெற்றவனுமாய்க் கொண்டு சேஷசயனத்தில் சாயநதுள்ள மதுசூதனனைப் பூமிதேவி கண்டாள். அத் தாமரைக் கணணனை அவள் கணடு வணங்கினாள் என்று – திருப்பாற்கடல்நாதனுடைய திருவுருவமைப்பு வருணிக்கப்பட்டுளளமையாலும், அதிலேயே தொணணூற்றெட்டாமத்தியாயத்தில் – இவ்வாறு கூறப்பட்ட பூமிதேவி முடியும் முழந்தாள்களும் பூமியில் படுமாறு நமஸ்காரம் செயது, பகவானே உமது பக்கத்தில் எப்போதும் நான்கு மகா பூதாலயங்கள் உள்ளன. (அதாவது) சங்கு, சககரம், கதை (தண்டு) தாமரை மலர் இவறறை முறையே உருவமாககொணட ஆகாசம், வாயு, தேஜஸ் ஜலம இவைகள் உள்ளன. பூமியான நானும் இந்த (பெண்ணின்) உருவங்கொணடு உம்முடைய திருவடிகளின் நடுவில் இருக்க விரும்புகிறேன்என்று கூறினாள். பகவானும் அங்ஙனமே இரு என்றார் பூமிதேவி தன் கோரிக்கை நிறைவேறப் பெற்று அவ்வாறே செய்தாள் என்று சொல்லப்பட்டுள்ளதாலும், ப்ரஹ்மாண்ட புராணம் வேங்கடாசல மகாத்மயம் முதலததியாயம் க்ஷீராப்தி நாதனை வருணிககும கெட்டத்தில் – ஸ்ரீதேவி பூமிதேவிகளால் ப்ரீதியுடன் வருடப் பெற்ற திருவடிகளையுடையவன் என்று கூறப்படடதானாலும், இங்ஙனம் கூறப்பட்ட உருவமைப்புக்களுடன் கூடியவராக கோவிந்தராஜன் பிரதிஷ்டை செய்விக்கப் பட்டார். இங்ஙனமே–ஆதிசேஷனுடைய விஷஜ்வாலைகளினால் மதுகைடபர்கள் எரிககப்பட்டார்கள்–என்றுள்ள வசனததினால், நகரமும் அதுவே காரணமாக எரிககப்படக்கூடுமென்று அஞ்சி (யாதவராஜனால்) அந்நகரமும் கருடனது உறுப்புக்களின் அமைப்புடையதாக நிருமிககப்பட்டது.

---

திரு தி. அ. கிருஷ்ணமாசாரியார்,
சிரோமணி—வித்வான.
திருபபதி.

---

**ஸ்ரீ கோவிந்தராஜனும் ஸ்ரீ வேங்கடேசனும் ஒருவரே என்கை**

இவ்விதமாகச் செய்வித்து பகவத் ராமாநுஜ முனிவர் மேலும் கூறுவாராயினர். வாராய் யாதவராஜனே, கோவிந்த ராஜனும் திருவேங்கட நாதனும் க்ஷீராப்தி (திருப்பாற்கடல்) நாதனுடைய அவதாரமாகையாலே

இருவரும ஒருவரேயென்று அறியக் கடவாய் திருவேங்கடவன் க்ஷீராப்தி நாதனது அவதாரமென்று பிரம்மாண்ட புராணம் முதலிலுள்ள இரண்டு அத்தியாயங்களில் தெளிவாக உள்ளது. ஆதிசேஷனுடைய அவதாரமான திருவேங்கடமலை எப்படி பகவானுடைய திருமேனியாகவும் இருக்கிறதோ, அப்படியே திருவேங்கடநாதன ஸ்ரீவைகுண்டநாதனுடைய அவதாரமாயிருந்த போதிலும் அவனிடம் க்ஷீராப்திநாதனுடைய அம்சமும் கலந்திருப்பதனால க்ஷீராப்திநாதனாகவும் அப்பெருமான் ஆகத் தகுதி பெற்றுள்ளான். பிரம்மாண்டபுராணம் இரண்டாமத்தியாயத்தில் — அகத்தியாதி முனிவர்கள் இமமலை விஷ்ணுவின வேறொரு திருமேனியாக உளளமையினால இதனைத் தம் கால்களால் மிதிக்கவில்லை. அரவரசின் உருவமான திருமலை நாராயணனுடைய அம்ச (தேக) மாகவும் உண்டாயிற்று என்று கூறப்பட்டுள்ளமை காண்க. ஆகையால் கோவிந்தராஜனுக்கும் திருவேங்கட நாதனுக்கும் உத்ஸவம் முதலியவற்றை ஒரே விதமாகவும் ஒன்றால் ஒன்றுக்குத் தடையில்லாமல் வெவ்வேறு காலங்களிலும் நடத்திவைக்கக் கடவாய.

மேலும் ஸ்ரீவைகுண்டநாத க்ஷீராப்தி நாதர்களின அவதாரங்களான திருவேங்கடநாத கோவிந்தராஜர்கள இருவரும முறையே தூரத்திலும் ஸமீபத்திலும உள்ளவர்களாய்க் கொண்டு தம்முடைய மூலமான பெருமாளகளின் லீலையையே காட்டித் தாமிருவரும் ஒருவரேயென்பதை அறிவிக்கின்றனர். எங்ஙனம் மிகத் தொலைவிலுள்ள ஸ்ரீவைகுண்டநாதன துன்பமுற்ற பிரமன் முதலியவர்கள் தாம் படும் துன்பத்தை முறையிட முடியாதவாறு அரியவனானபடியினால், கூக்குரல் கேட்டு அவர்களைக் காப்பதற்காகவும் அவர்கள் தன்னைத் தஞ்சமடைவதற்காகவும் தானே திருப்பாற்கடலை அடைந்து அணமையில் இருந்து அடைய எளியவனாய் விளங்குகின்றானோ, அங்ஙனமே திருவேங்கடநாதனும் மிகவுயர்ந்த திருமலைச் சிகரத்தில் வெகு தூரத்திலிருந்து கொண்டு, நோய் முதலியவற்றால் சக்தியற்றவர்கள் தன்னையடைய முடியாதவாறு அரியவனாயிருந்தவன், அவர்கள வருத்தமில்லாமல் தன்னை யடைவதற்காகத் திருப்பதியில தானே வேறோருருக் கொண்டு அணமையில் இருந்து அனைவர்க்கும் எளியவனாய் விளங்குகின்றான்.

பல சொல்லி என்? ஸ்ரீவைகுண்டநாதனும் க்ஷீராப்திநாதனும ஒருவரானால் அவர்களின் அவதாரமான திருவேங்கடநாதனும் கோவிந்தராஜனும் ஒருவரேயென்பது அறியவெளியதாகும். மேலும்—இப்படிக் கலியுகத்தில் சில நாட்களுக்குப் பின்பு க்ஷீராப்திநாதனது அவதாரமான திருச்சித்திரகூடத்திருப்பதியெம்பெருமானான ஸ்ரீகோவிந்தராஜன் ஏதோவொரு காரணத்தினால் திருவேங்கடமலையடிவாரமான திருப்பதிக்கு எழுந்தருளப் போகிறான். அப்போது ஸ்ரீவைகுண்டநாத க்ஷீராப்திநாதர்களின் அவதாரங்களாகிய திருவேங்கடநாத ஸ்ரீகோவிந்தராஜர்கள் முறையே திருமலையின மேற்பகுதியிலும அடிவாரத்திலுமாக எழுந்தருளியிருந்து, திருமலையேறும ஆற்றலில்லாமல நோய் முதலியவற்றால் துன்புற்றவர்க்கு அருமையாகவும் எளிமையாகவும் இருந்துகொண்டு, தமக்கு மூலமானவர்களாய் பிரம்மாதி தேவர்களுக்குத் தூரம் ஸமீபம் காரணமாகப் பரமபதத்திலும பாற்கடலிலும் இருந்துகொண்டு அரியவனாகவும் எளியவனாகவும் அமைந்துள்ள ஸ்ரீவைகுண்டநாதனுடையவும் க்ஷீராப்திநாதனுடையவும் லீலையையே வெளிக்காட்டுகின்றவர்களாய் அவ்விருவரைப்போல் ஒருமைப்பாட்டையடைந்து எழுந்தருளியிருக்கப் போகிறார்கள என்று வரப்போகிற செய்தியை அறிந்தே, ஸ்ரீவேதவியாஸபகவானுடைய சிஷ்யரும் முக்காலத்திலுள்ள தருமசரித்திரமனைத்தையும் நன்கறிந்தவருமான ஸ்ரீலோமஹர்ஷண முனிவர் ஸ்ரீவேங்கடாசலமாஹாத்மியங் கூறும் ஸ்ரீபாத்மபுராண முதற்பகுதி 61 எண்ணிட்ட இருபத்தொன்பதாமத்தியாயத்தில ஸ்ரீவேங்கடேசாஷ்டோத்தர சதநாமாவளியில்—கோவிந்தனாகிய உனக்கு எப்போதும் வணக்கம ஸ்ரீநிவாஸனாகிய உனக்கு வணக்கம என்று படித்து அதன மூலமாக ஸ்ரீனிவாஸனுக்கும கோவிந்தராஜனுக்கும் ஒற்றுமையையே அறிவித்தனர். ஆகையால் திருப்பாற்கடல் தான் திருவின் பிறப்பிடமாதலால் திருப்பதி (திருவின் இடம்) என்ற பெயரால குறிக்கப்பட்ட நகரின் உருவத்தைப் பெற்றுள்ளது. ஸ்ரீவைகுண்டமே சிறிது எழுதது வேறுபாட்டினை அடைந்து ஸ்ரீவேங்கடம என்னும் பெயரால் குறிக்கப்பட்ட மலையின் உருவத்தைப் பெற்றிருக்கிறது அவ்விரண்டிடங்களிலும எழுந்தருளியுள்ள கோவிந்தராஜனும் திருவேங்கடநாதனும் முறையே க்ஷீராப்திநாதனும ஸ்ரீவைகுண்டநாதனுமே ஆவர். அவர்கள் இருவரும ஒருவரேயென்று திண்ணமாக எண்ணிப் பரிபூரண மதிப்புக் கொண்டு நீ அவர்களுக்கு ஸமானமாகவே உத்ஸவம முதலானவற்றைத் தடையின்றி வெவ்வேறு காலங்களில நன்றாக நடத்திவைக்கக் கடவாய—என்று யாதவராஜனுக்குக் கட்டளையிட்டருளினார்

### இருவரும் ஒருவரே என்பதற்குச் சான்றாக ஒரு கதையும் இராமானுசரின் ஏற்பாடும்

அதன்பின்பு யாதவராஜன் இராமானுசரின் கட்டளையின்படி ஸ்ரீகோவிந்தராஜனுடைய திருவாராதனம திருவிழா முதலியவற்றை நடத்திவரும் காலத்தில், ஸ்ரீகோவிந்தராஜனும் வேண்டுவார் வேண்டும் இம்மை மறுமைப்பயன்கள் அனைத்தையும் அளித்துக் கொண்டு பிரசித்தியுடன் விளங்கி வருமளவில், மகப்பேற்றை விரும்பிய காசி மன்னவன் திருவேங்கட

முடையானைச் சேவிக்கக் குடும்பத்தோடு புறப்பட்டு வா, அப்பெருமான 'தேஹி மே, ததாமிதே' (=எனக்கு ஒன்று தா. உனக்கு ஒன்று தருகிறேன்) என்று வேதத்தில் பிரசித்தமானதும் பெரும்பாலும் வேறு தேவதைகளின் மூலமாகவே தன்னால் நிறைவேற்றப்பட்டு வருவதுமான லீலையைத் தன்னுடையதே என்றும் தனது சங்கற்பத்தினாலேயே வேறு தேவதைகளிடம் உள்ளதென்றும் உலகோர்க்குத் தெரிவிக்க வெண்ணித் தானும் வேறு தேவதைகளின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு, காசி மன்னனது பட்டத்தரசியின் கனவில் தோன்றி, 'உனக்கு மகப்பேறு அளிக்கிறேன் உனது மூக்கினகண உள்ள மணியை எனக்குத்தா' என்று யாசிக்க, 'ஐயனே நான் கணவனுக்கு வசப்பட்டவளாயிருக்கிறேன், அவன் இசைந்தால் தருகிறேன்' என்று அவ்வரசி விடையளிக்க, 'அப்படியானால் எங்கள் அண்ணராகிய கோவிந்தராஜப் பெருமாளுக்கு நானும் வசப்பட்டிருக்கிறேன் அவர் இசைந்தால்தான் உனக்கு நான் மகப்பேறு அளிக்கவல்லேனாவேன், இல்லையேல் இல்லை' என்று எதிர்விடையளித்து, அதன் வாயிலாகத் திருவேங்கடவன் இப்போது இராமாநுசமுனிவரால் நிச்சயிக்கப்பட்டிருக்கிற – கோவிந்தராஜனுக்கும் தனக்கும், ஒரே பொருளை மூலமாகக்கொண்டுள்ளதனால் ஏற்பட்டுள்ள—ஒரே பொருளில் அடங்கியுள்ளமையென்னும் ஒரேபொருளாந்தன்மையையே முன்பு வெளியிட்டருளினான்-என்று இக்கதையைக் கேட்ட பகவத் ராமாநுஜமுனிவர், எப்படி ஒரு கோவிலில் பஞ்சபேரங்க (ஐந்து மூர்த்திக)ளுக்கு ஒன்றையே மூலமாகக் கொண்டிருப்பதனால் ஒற்றுமை உள்ளதோ அப்படியே நம்மால் இசையப்பெற்ற—ஸ்ரீகோவிந்தராஜனோடு தனக்குள்ள ஒற்றுமை ஸ்ரீநிவாஸபகவானால் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆகையால் இனி, திருவேங்கடநாதன் ஸ்ரீகோவிந்தராஜன் ஆகிய இவ்விருவருக்கும் திருவாராதனகாலத்தில் வேத ஸம்ருதி இதிஹாஸ புராணம் முதலியவற்றை ஓதும்போது ஸ்ரீவேங்கடாசலமாகாத்மியப்பகுதி ஸ்ரீசித்ரகூடமகாத்மியப்பகுதி ஆகிய இரண்டும் இரண்டிடங்களிலும் ஓதப்பட வேண்டும். நித்யாநுஸந்தேய (நினைக்கத்தக்க) திவ்யப் பிரபந்தங்களை ஓதும்போதும் திருவேங்கடமுடையான ஸ்ரீகோவிந்தராஜன ஆகிய இருவரைப் பற்றிய திவ்யப் பிரபந்தப் பகுதிகளும் இரண்டிடங்களிலும் ஓதப்படவேண்டும். திருமலை திருப்பதி என்னும் இரண்டு ஸ்தலங்களில் வசிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் இந்த இரண்டு திவ்ய தேசங்களையும் ஒன்றாகவே மதித்துத் தம் திருமாளிகைகளில் விவாகம் முதலான உத்ஸவாதிகள் நடத்தும்போது, தத்தம் தாயார்களோடு கூடிய திருவேங்கடமுடையான் கோவிந்தராஜன என்னும் இருவருக்கும் ஸம்பாவனை செய்யக்கடவர்கள். கத்யம் (வசனநடையிலுள்ள துதி) பிருது முதலியவற்றை ஓதும்போதும் இவ்விருபெருமாள்களின் நாமங்களைச் சொல்லியே இருவருக்கும் கத்யம் பிருது முதலியனவற்றை ஓத வேண்டுமென்ற நியதியையும் செய்தருளினார்.

**ஸ்ரீ கோவிந்தராஜன் கோவிலில் ஆண்டாள் பிரதிஷ்டை**

இவ்வாறு, ஸ்ரீராமாநுசமுனிவர் ஸ்ரீநிவாஸ பகவானுடைய எல்லையற்று இடையறாத செல்வத்தின் வளர்ச்சிக்காக அவரது திருமார்பிலுள்ள பொற்கண்டியில் வ்யூஹலக்ஷ்மியைத் தாம் பிரதிஷ்டை செய்வித்தபடியே, ஸ்ரீகோவிந்தராஜனுடைய செல்வமும் இடையறாமல் மேன்மேலும் வளர்ச்சியடைவதற்காக ஒரு பிராட்டியைப் பிரதிஷ்டை செய்விக்கவேணுமென்று ஆராய்ந்து, பட்டர்பிரானன பெரியாழ்வாருடைய கன்னிகையானவளும் கர்ப்பவாஸம்பண்ணாமல்திருத்துழாய்வனத்தில் பிறந்தவளும் பூதேவியின் அம்சங்கொண்டவளுமான ஸ்ரீகோதாதேவியாகிய ஆண்டாளை, குறைவின்றி லக்ஷணங்கள் அனைத்தும் அமையப்பெற்றவளாகவும் ஸ்ரீகோவிந்தராஜனுக்கு எதிராக ஒளிவீசிக்கொண்டு அழகுடன் கூடிய செங்கழுநீர் மலரால் அலங்கரிக்கப்பட்ட இடத்திருக்கையையுடையவளாகவும், அப்பெருமானுடைய பெருஞ்செல்வத்தை வளர்க்கும் வ்யூஹலக்ஷ்மியின் யந்திர மந்திரங்களை முறைப்படி எழுதி அலங்கரிக்கப்பட்ட திவ்ய ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளியிருப்பவளாகவும், ஸ்ரீகோவிந்தராஜனது வலப்பக்கத்தில் வேறொரு கோவிலில் தனிக்கோவிலிலுள்ள பிரதானமான தாயார் போலவே பிரதிஷ்டை செய்வித்தருளினார்.

**திருவிழா முதலியன**

பின்பு இராமாநுசருடைய உத்தரவு கொண்டு, யாதவராஜன கோவிந்தராஜருக்குப் புராணப்பிரசித்தமான ஆனிமாதப் பிரம்மோத்ஸவத்தையும் ஆண்டாளுக்கு ஆடிமாதத் திருநக்ஷத்திரோத்ஸவத்தை யும் மார்கழிமாத நீராட்டவுத்ஸவத்தையும் மிக உத்ஸாஹத்துடன் நடத்தி வைத்தான். மேலும் அவன் ஆண்டாளோடு கூடிய கோவிந்தராஜனுக்கு எப்போதும் மகாபாகவதர்களின் மங்களாசாஸனத்தினால்-தடையற்ற செல்வத்தின் செழிப்பை உண்டாக்கக் கருதி உடையவரின் உத்தரவுகொண்டு கோவிந்தராஜன் எழுந்தருளியுள்ள ராமாநுஜபுரத்தில் நான்கு பக்கங்களிலுமுள்ள பலிஸாதிக்கும் திருவீதிகளில் பல திருமாளிகைகளை உண்டாக்கி, திருமலைநம்பிகள் திருமலையனந்தாழ்வான் முதலான மஹாபாகவதர்களுக்கு அவற்றை ஸமர்ப்பித்து அவர்களை அங்கு வசிக்கச் செய்தான்.

அங்ஙனமே, 'நகரத்தின் வடமேற்குத் திசையில் ஸமமான இடத்தில், நகரமக்களின் அபிவிருத்திக்காகக் கடைத்தெருவை நிருமிக்க வேண்டும்' என்ற சாஸ்திரத்தின்படி, ஸ்ரீராமாநுஜபுரத்தின் வடமேற்குத் திசைப்பகுதியில் நகரமக்களுக்கு உதவுமாறு கடைத்தெருவையும், 'பெருமாளுக்குக் கிழக்குத்திக்கில் தானியக்களஞ்சியத்தை ஏற்படுத்தவேண்டும்' என்னும் சாஸ்திரவிதிப்படிப் பெருமாள்கோவிலுக்கு முன்பக்கத்தில் பெருமாளுக்குத் தானியக்களஞ்சியத்தையும் நிருமாணம் செய்வித்தான்.

அனந்தார்யர் தொடுத்த ஸ்ரீவேங்கடாசலேதிஹாஸ மாலையில் நான்காம் கொத்து முற்றும்.

(தொடரும்)

# கம்பன் கண்ட சந்தங்கள்

**முன்னுரை :**

தொல்காப்பியர் தம்முடைய பொருளதிகாரத்தில் மெய்ப்பாட்டியல் என்ற ஒரு இயலைப் படைத்துள்ளார். புலன்கள் வாயிலாக மனிதன் இன்பத்தையும், துன்பத்தையும் சுவைக்கிறான். அகமும், புறமும் அடையும் உணர்ச்சியே சுவையாகும். தொல்காப்பியர் சுவையை எண் வகை மெய்ப்பாடுகளாகப் பிரித்துக் கூறுகிறார்.

'' நகையே அழுகை இளிவரல மருடகை
அச்சம் பெருமிதம் வெகுளி உவகை
யெனறு
அபபால எட்டே மெய்ப்பா டெனப ''

இந்த எண வகை மெய்ப்பாடுகள் ஒழிய வேறு சில மெய்ப்பாடுகளையும் கூறுவார். இன்புறல், நடுநிலை, அருள், தன்மை, உடைமை முதலிய முப்பத்திரண்டென்பார்.

**கம்பன் :**

'' கல்வியில பெரியவர் கம்பா''
'' கம்பன ஒரு கவிச் சக்கரவர்த்தி''
'' கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும கவி பாடும்''
'' யாமறிந்த புலவரிலே கமபனைபபோல
வள்ளுவனைப்போல் இளஙகோவைப் போல்
பூமிதனில்யாஙகணுமே கண்டதிலலை''

இவ்வாறு பலராலும் போறறப் பட்ட கம்பன் தன்னுடைய கமப ராமாயணத்தில், தொல காப்பியர் கூறிய மெய்ப்பாடுகளைப் பயனபடுத்திக் காவியத்தைச் சிறபபித்தான். இடத்திறகேற்ப, பாத்திரங்களுக் கேற்ப அவர்கள் உணர்ச்சிகளைக் கவிதையின் மூலம் எடுத்துக்காட்டிய பெருமை கம்பனையே சாரும். உணர்ச்சிதான் கவிதையின் உயிராகும். கம்பன் கண்ட சந்தங்களைக் காண்போம்.

**நடை :**

கம்பன் 'தாடகை' என்ற ஒரு பாத்திரத்தைப் படைக்கிறான் தாடகை என்பவள் ஒரு அரக்கி மிகக் கொடியவள். பெரிய வடிவத்தைப் பெற்றிருக்கின்றாள். ஆகாயம் வரை வளர்ந்த நீண்ட உடலும், பனை மரத்தைப் போன்ற கைகளும் பெற்றவள். அவள் நடந்து வரும்பொழுது நில நடுக்கம் ஏற்படுகிறது. மரங்கள் ஆடுகின்றன. அவள் நடைக்கேற்ற சந்ததைதைப் படைத்துள்ள கம்பனின் திறத்தைக் காண்போம்.

'' சிலமபுகள சிலம்பிடை செறித்தகழ லோடு
நிலம்புக மிதித்தனள நெளித்தகுழி வேலை
சலம்புக அனல்தறுக ணந்தணனு மஞ்சிப
பிலம்புக நிலைக்கிரிகள் பின்தொடர வந்தாள''

'' இறைககடை துடித்த புருவத்தள் எயிறெனும்
பிறைக்கடை பிறக்கிட மடித்த பிலவாயள
மறைக்கடை யாக்கிவட வைக்கன லிரண்டாய
நிறைக்கடல் முளைத்தென நெருப
பென விழிததாள்''


திரு என். முராரி, எம்.ஏ., பி.எட்.,
சேலம்.


'' கடஙகலுழ் தடஙகளிறு கையொடுகை தெற்று
வடங்கொள நுடஙகுமிடை யாண மறுகி வானோர்
இடங்களு நெடுநதிசையு மேழலகு மெஙகு
மடங்கலு நடுங்கவுரு மஞ்சநனி யார்த்தாள்.''

இநதக் கவிதைகளைப் படிக்கும் பொழுதே தாடகை என்ற அரக்கி நடந்து வருவதைப் போன்றுள்ளது. அதற்கான வல்லின எழுத்துக்களை அதிகமாகப் பயன்படுத்தி, கொடுமை காட்டப்பட்டுள்ளது. வல்லின எழுத்துக்களும் கடுமையான எழுத்துக களாகும். இவ்வாறு இடத்திற்கேற்ப பொருத்தமான சந்தத்தை அமைத்து பலருடைய பாராட்டுதல்களையும் பெறுகிறான்.

**குகன் :**

காய், கனி, கிழங்குகளை உணடு காட்டில் வாழ்பவன் குகன் சிறிதும் கல்வி அறிவில்லாத வேடன் குகன். நாவாய்ப் படைகளை வைத்திருக்கின் றான். 'அன்பிற்கும் உண்டோ அடைக்கும தாழ்' என்ற வாக்கிற்கேற்ப இராமன்மீது மிகுந்த அன்பைக கொணடவன் குகன்.

இராமனைக் காணபதற்காக, பரதன் சுற்றத்தாரோடு காட்டிற்கு வருகிறான். வெகு தூரத்தில் பரதன் கூட்டத்தோடு வருவதைக் கண்டு இங்கும் படையோடு, பரதன் வருகிறான் என வெகுண்ட குகன் பின் வருமாறு கூறுகிறான்

'' அஞசன வண்ணனென ஆருயிர் நாயகன ஆளாமே
வஞ்சனை யாலரசு செய்திய மனனரும வந்தாரே
செஞசர மெனபன தீயுமிழ கின்றன செலலாவோ
வுஞ்சிவர் போய்விடின நாய்க்குகன என்றெனை யோதாரோ.''

'' ஆழ நெடுநதிரை ஆறு கடந்திவா போவாரோ
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் விலலாளோ
தோழமை என்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ
வேழமை வேடன இறந்திலன என் றெனை யேசாரோ''

(35-ம் பக்கம் பார்க்க)

# மஞ்சள் மகத்துவம்

நாம் பூஜை செய்வதற்கு மஞ்சள் உபயோகிக்கிறோம். முதலில் மஞ்சளினால் பிள்ளையார் செய்து அதற்குப் பூஜை செய்து விட்டுப் பிறகு வழக்கமான பூஜை செய்கிறோம்.

ஏதாவது நமக்குக் கஷ்டம் வரும் நேரத்தில் கடவுளை நினைத்துத் திருத்தணி முருகன் அல்லது திருப்பதி வெங்கடாஜலபதி கோயிலுக்கு வருவதாக வேண்டிக் கொண்டு மஞ்சள் துணியில் நாணயம் எடுத்து முடித்து வைப்பதுண்டு. பிறகு அத்திருத்தலங்களுக்குச் செல்லும் சமயம், முடித்து வைத்திருந்ததை எடுத்துக் கொள்வார்கள். மலைக்கோயில்களுக்குச் செல்லும் சமயம், சிலர் மஞ்சள் துணி அணிந்து செல்வதையும் பார்க்கலாம்.

சுத்தமான மஞ்சளினால் தயார் செய்த குங்குமத்தைக் காகிதத்தில் கட்டி வைத்திருந்து மறுநாள் பிரித்துப் பார்த்தால் காகிதத்தில் மஞ்சள் நிறம் ஏறியிருக்கும். இது சுத்தமான குங்குமத்திற்கு அறிகுறி. கடவுளுக்கு மஞ்சளைப் பொடித்து நீரில் கரைத்து அபிஷேகம் செய்வார்கள்.

கோயில் உற்சவம் முடிந்த பிறகு கடைசி நாளில் மஞ்சள் நீராட்டுவிழா என்று என்று கொண்டாடுவார்கள். சில கோயில்களில் அம்மனுக்கு நவராத்திரி உற்சவ சமயத்தில் குங்கும லட்சார்ச்சனை செய்வார்கள்.

நவகிரகங்களுக்கு மஞ்சள் வஸ்திரம் அணிவித்திருப்பதைக் கோயில்களில் கண்டு மகிழலாம். ஜாதகத்தில் குருபகவான் இருப்பிடத்தைக் கொண்டு குருபலம் வந்திருப்பதைப் பார்த்து விவாஹம் செய்கிறார்கள்.

சுமங்கலிகளுக்கு மஞ்சள், குங்குமம் இரண்டும் முக்கியமானவை. குண்டுமஞ்சள் வாங்கி அதைக்கல்லில் உரைத்துப் பெண்கள் பூசிக்கொள்கிறார்கள். அப்பொழுது கையில் சரியாக மஞ்சள் வராது. கல்லில் அப்படியே இருக்கும். கடையில் வாங்கிய மஞ்சளைத் துண்டு துண்டாக உடைத்து வெயிலில் காய வைத்து இடித்து வைத்துக்கொண்டு தேவையான பொழுது சிறிய கிண்ணத்தில் எடுத்துவைத்துப் பூசிக்கொண்டால் கல்லில் வீணாகாமல் இருக்கும்; மஞ்சளின் முழுப் பயனையும் பெறலாம். பெண்கள் அணியும் திருமாங்கல்யக் கயிறும் மஞ்சள் நிறத்தில் உள்ளது. சுத்தமான தங்கம் என்பதற்கு அடையாளம், அது பசு மஞ்சள் நிறத்தில் காட்சி அளிப்பதே.

மஞ்சள்தூள் கலந்து சாப்பிட்டால் இருமல் குணமாகும். கட்டிகள் உடைவதற்கும் மஞ்சள் பூசுவார்கள். மஞ்சள் கிருமி நாசினி ஆகும். தொற்று நோய்கள் வராது தடுக்கும் சக்தி மஞ்சளுக்கு உண்டு. அதனால்தான் நாம் சாப்பிடும்உணவுகளில் சமையல் செய்யும் பொழுது சிறிதளவாவது மஞ்சள் சேர்க்கிறார்கள். வாசல் கதவுகளுக்கு மஞ்சள், குங்குமம் பூசுகிறார்கள்.

மஞ்சள் தூள், சாம்பல் இரண்டையும் கலந்து தூவினால் வெல்லம், சர்க்கரை போன்ற இனிப்புப் பொருள்களின் அருகில் எறும்பு வருவது குறையும்.

பொங்கல் பண்டிகை அன்று பெண்கள் சமைக்கும் முன்பு சமையல்செய்யும் பாத்திரம் அல்லது பானைகளில் மஞ்சள் கொத்து கட்டுவார்கள். பூஜைக்காகவும் தனியாக எடுத்து வைத்துக் கொள்வார்கள்;

பொதுவாகக் கல்யாணப் பத்திரிகை அச்சடிக்க ஒரு புறம் மஞ்சள் நிறமும், மறுபுறம் சிகப்பு நிறமும் உள்ள காகிதத்தை உபயோகிக்கிறோம். கல்யாணம் போன்ற சுபகாரியங்களுக்கு மளிகைச்சாமான்கள் வாங்குவோமானால் முதலில் மஞ்சள் குங்குமம் எழுதியே (பட்டியல்) கொடுப்பது வழக்கம். புது மணத் தம்பதிகளை ஆசீர்வாதம் செய்வதற்கு மணப் பந்தலில் மஞ்சள்கலந்த அரிசி (மங்களாட்சதை) கொடுக்கப் படுகிறது.

படைக்கும் தொழிலை மேற்கொண்டுள்ள பிரம்மாவின் நிறம் மஞ்சள். ஸ்வர்ண வர்ணமாக உருக்கி விட்ட தங்கம் போல் இருக்கிறாராம். லக்ஷ்மியும் அதே நிறம் தான்!

பூத்துக் குலுங்கும் மலர்களிலும் பல மஞ்சள் நிறம் கொண்டவை. கொத்துக் கொத்தாகக் கண்களுக்கு விருந்து அளிக்கும் சரக்கொன்றை மஞ்சள்; மந்தாரை மஞ்சள்; ஜவந்தி மஞ்சள்; அரளியில் தங்க அரளி என்றே ஒரு மலருக்குப் பெயர்.

“பொன் வைக்கிற இடத்திலே பூ வைத்தல்” என்னும் பழமொழியும், மஞ்சள் நிறத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து மங்களகரமான வாழ்க்கைக்கு மஞ்சள் எப்படிக் கைகொடுக்கிறது என்பதையும் விளக்குகிறது.



திரு. ஏ. என். சுப்பிரமணியன்,
குடியாத்தம்.

# துவாதசி திதியில் ஸ்ரீ மஹா விஷ்ணு வழிபாடு

**तद्विष्णोः परम पदं सदा पश्यन्ति सूरयः।**
**दिवीव चक्षुराततम् ॥**

*(ரிக்வேதம் 1·2.7.5)*

"ஸர்வ வியாபக பரமேஸ்வரன் ஸ்ரீமந்நாராயணன். அவருடைய உத்தமமான, ஆனந்தஸ்வரூப பதத்தை, இருக்கை நிலையைக் கண்டு களிப்பவர்கள், மோக்ஷ நிலையை எப்பொழுதும் காணவல்லவர்கள், வித்வத் புருஷர்களாவர், ஸூரிகளாவர். அது எவ்வாறெனில், அப்பரம புருஷன் தேச, கால, வஸ்து பேதங்களற்றவர்: எங்கும், எப்பொழுதும், எதிலும் வியாபித்து நிற்பவர் (ஆததும்). ஆகவே அவரது பதம், நிலை யாவருக்கும் காணப்படுவதாக உளது. பகலில் சூரியனின் ஒளி வியாபித்தவுடன் நம் எல்லோருடைய கண்களும் அந்த சூரியனைக் காண்பது போல ஸர்வ பிரகாசமய புருஷன் வித்வத் சூரிகளின் கண்களுக்குப் புலப்படுகிறார்."

"இப்பரமபதத்தை சகல வேதங்களும் புகழ்கின்றன; சகலவித தபோ மார்க்கங்களும் அதை அடையும் வழியைக் காண்பிக்கின்றன; பிரம்மசர்யம் போன்ற பல்வேறு விரதங்கள் இதற்காகவே மேற்கொள்ளப்படுகின்றன"—கடோப நிஷத்: 2–15.

இங்குக் குறிப்பிடப்பட்ட விரதங்கள் பற்றிச் சில உண்மைகளைக் காண்போம்.

ஹிந்துக்களின் தெய்வ வழிபாட்டில் விரதங்கள், பண்டிகைகள், உத்ஸவங்கள் என மூன்று பிரிவுகள் உள. மானிடர்களின முககுண இயற்கை நிலைகளை ஒட்டியே, இநதப் பாகுபாடுகள். ஆன்மீக நிலையில் உயர்வு பெற ஸாத்விக புருஷனுக்கு உதவுவது தனி நபர் விரதங்கள; ராஜஸிக புருஷர்களுக்குப் பண்டிகைகள எனப்படும் குடும்ப சகிதம் கொண்டாடப்படும் தெய்வ ஆராதனைகள் உதவுகின்றன. உத்ஸவங்கள் பெரும்பாலும் ஆலயங்களை மையமாகக்கொண்டு நடநதேறுபவை. அவறறில் பங்கு கொள்பவர்கள் தமோ குணம் மேலிட்ட பெரும்பான்மை மக்கள். தனி மனிதன், குடும்பம், சமூகம் ஆகிய மூன்றும் ஆன்மீக நிலை எய்த வழிவகுக்கின்றவையே இந்த முவ்வித வழிபாடுகள். இவை மாதந்தோறும் நடந்தேறுபவையாய் உள.

இவ்வழிபாட்டு நாட்களை நிர்ணயிப்பதில் திதி, வாரம், நக்ஷத்ரம், யோகம், கரணம் என்ற ஐந்து அங்கங்கள் (பஞ்சாங்கம்) இடம்பெறுகின்றன. இவையாவும் பரம புருஷனின் காலஸ்வரூப சக்தி அம்சங்களாகும்.

**तिथिर्विष्णुः तथा वारं नक्षत्रं विष्णुरेव च।**
**योगश्च करणं चैव सर्वं विष्णुमयं जगत ॥**

என்ற வாக்குப்படி இவ்வைந்தும் விஷ்ணுமயமாகவுள்ள பிரபஞ்சத்தின் கால சக்திகளேயாகும்.

இவற்றில் திதிகள் என்பவை பூமியைச் சுற்றி வரும் சந்திரனின் கதியைக் குறிப்பிடுபவை. 30 நாட்கள் கொண்ட மாதத்தில் சுக்ல பக்ஷம், கிருஷ்ணபக்ஷம் என்ற இரு பிரிவுகள. அமாவாசை, பூர்ணிமா என்ற இரு நாட்கள் இப்பிரிவை ஏற்படுத்துகின்றன. எஞ்சியுள்ள 28 நாட்கள் 14, 14 திதிகளாகக் கணககிடப்படுகின்றன. விரதங்கள் யாவும் திதிப் பிரதானம் பெற்றவை. ஏன்? திதி என்பது சந்திரனின் கதி. சந்திரன், மனேசக்தியின ஸ்தூல சின்னம். இம் மனம மானிடனிடத்தில் இருநோக்குடன செயலபடுகின்றது. பௌதிக நோககில் பூவுலக சுகபோகஙகளை நாடி நிற்கும; ஆன்மீக நோக்கில் 'ஸ்ரேயஸ' என்ற ஆன்ம உன்னத நிலையை நாடி நிற்கும். ஆகவே பௌதிக நோக்கு மனதின் சுக்ல பக்ஷம். அதன் உச்சநிலை பௌர்ணமி தினம்; ஆன்மிக நோக்கு, அதன் கிருஷ்ண பக்ஷம். அதன் உச்ச நிலை அமாவாசை நாள்.

சூரியனும் சந்திரனும் சேர்ந்தாற் போல காணப்படும் நாள் அமாவாசை. ஒன்றுக கொன்று நேர எதிராகக்காணப்படும் நாள் பௌர்ணமி; அன்று தானே சூரியன் மறைய சந்திரன் உதிக்கிறான். அத்யாத்ம நிலையில் சூரியன ஆன்ம சக்தி, சந்திரன் மனே சக்தி மனே சக்தி ஆன்ம சக்தியில் லாபம் பெறும் நாள் அமாவாசை; ஆன்ம சக்தியை எதிர்த்து நிற்கும் நாள் பௌர்ணமி. இந்த உண்மையை ஆதாரமாகக் கொண்டு தான் ஸ்ரேயஸ்ஸை அளிக்கும் விரதங்கள் திதிகளைப் பிரதானமாகப் பெற்றுள்ளன எனலாம்.

ஸ்ரீ மஹா விஷ்ணுவின் அருளைப் பெற்று பரமபதத்தைப் பெற வழி வகுக்கும் நாளாக வைகுண்ட ஏகாதசி திதி வழிபாடு நடந்தேறி வருவதை யாவரும் அறிவர். இது போலவே துவாதசி திதியும் ஸ்ரீ விஷ்ணுவுக்கு விசேஷமாக உளது.

இந்த துவாதசி திதியில் ஸ்ரீவிஷ்ணு பகவானின் ஆராதனை பற்றி வராஹ புராணத்தில் கீழ்க்கண்ட விவரங்கள் காணப்படுகின்றன.

**मासेषु मार्गशीर्षोऽहम्:** மாதங்களுள் மார்கழி நான என பகவான் ஸ்ரீமத் பகவத் கீதையில் கூறியுள்ளார். இதை ஒட்டியதாய் மார்க்க சீர்ஷம் முதல் காரத்திகை மாதம் முடிய உள்ள 12 மாதங்களில்வரும் சுக்லபக்ஷ துவாதசி திதிகளில் பரம புருஷன் ஸ்ரீமன் நாராயணனின் 10 அவதார மூர்த்தி வழிபாடுகளும், மேலும்

ஸ்கந்த நாராயணன்
கொச்சின்-9.

பதமநாப மூர்த்தி, பூமாதேவியாகிய தரணீ மூர்த்திகளின் வழிபாடும் கூறப்பட்டுள்ளன.

இவ்வித துவாதசி விரத வழிபாட்டால் இஹலோக, பரலோக நலன்கள் யாவை என்பதைக் குறிப்பிட இது சம்பந்த புராணக் கதைகள் இடம் பெற்றுள்ளன. நான்கு யுகங்கள். ஏழு த்வீபங்கள் ஆகிய பூமண்டல கால, தேசப் பின்னணியில் இந்தக்கதைகள் பின்னப்பட்டுள்ளன.

மற்றோர் விஷயம்:எல்லா துவாதசி விரதங்களும் அதற்கு முந்திய ஏகாதசி விரதத்தின் தொடர்பாகவே வர்ணிக்கப்பட்டுள்ளன. ஏகாதசியில் பட்டினி கிடந்து உபவாசம் இருப்பர். இதன் மூலம் புலன்கள் 10, மனம் 1 ஆகிய 11ம் (ஏகாதசி) பாஷ்ய விஷய கிரஹணம் ஏற்பட்டு அந்தரங்கமாக செயல்படும். அந்த அந்தரங்கத்தில் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற 4 அந்தஹ்கரணங்கள் ஜாக்ரத், ஸ்வப்ன, சுழுப்தி என்ற 3 நிலைகளிலும், அதாவது $4 \times 3 = 12$ நிலைகளிலும் பகவானை மானஸீகமாக வழிபடத் துவங்கும்; இதுவே துவாதசி வழிபாடு. விரதங்களுக்கான பூஜா முறைகள், தான, தர்ம, பிராமண போஜன தக்ஷிணைகள் யாவும் விதிக்கப்பட்டுள்ளன. தற்கால கால நிலையில் இவ்விதிகளின் படி விரதம் மேற்கொண்டு பயனுள்ள வகையில் நடத்துவது என்பது சிந்தனைக்குறிய விஷயமாகக் காணப்படும். எனினும் இந்த விரதங்களின் அடிப்படை தத்துவங்கள் யாவை எனக்கண்டு அதன் படி அத்யாத்ம நிலையில் இவற்றை அனுஷ்டிக்க முடியும். அதற்கான பலன்களையும் பெற இயலும். அது பற்றி சில முக்கியவிஷயங்களை அறிய முயல்வோம்.

அவதார இரகசியம, மாஸ-திதி சம்பந்த இரகசியம் ஆகிய இரண்டும் கவனிக்க வேண்டியவையாயுள்ளன.

மீனோடாமை கேழல் கோளரியாய்<br>
வானுர் குறளாய் மழுபபடை<br>
முனியாய்ப்<br>
பின்னுமிராம ரிருவராய்ப் பாரில்<br>
துன்னிய பரந்திர் துவரை<br>
மன்னனுமாய்க்<br>
கலிதவிர்த்த ருளுங் கற்கியாய் மற்றும்<br>
நலிவதற் கென்னும் வலவினை மாற்ற<br>
நானுவுருக் கொண்டு நல்லபடியோர்<br>
வானுரின்ப மிங்குற வருதி<br>
—மும்மணிக்கோவை<br>
(ஸ்ரீதேசிகப்ரபந்தம்)

மேற்கண்ட பாடலில் பரமனின் அவதாரங்களின் நோக்கம் மிக அழகாகக் கூறப்பட்டுள்ளது. 'வல்வினை மாற்றுதல்', 'வானுர் இன்பம் இங்கு உறுதல்' என்ற இரண்டு காரியங்களை நிறைவேற்ற இவவவதாரஙகள வருகை தருகின்றன.

'' தர்மம் சீர்குலைந்து அதர்மம மேலிடடால் அந்த தர்மத்தை நிலைநாட்ட தான் அவதரிப்பதாக'' கண்ணபிரான் ஸ்ரீமத் பகவத் கீதையில் கூறியுள்ள படியே இப்பாடல் கருத்து உளது.

இங்கு 'தர்மம்' என்ற சொல்லுக்கு வியாபகமான பொருள் கொண்டு பிரபஞ்ச தர்மம், பூமண்டல தாமம என்ற நிலையில் அவதாரங்களின செயல்களைப் புரிந்துகொள்ளவேண்டி வருகிறது

பகவான் பிரம்மாண்டமான பிரபஞ்சத்தைப் படைத்தார். அதன் ஓர் சிறு அம்சமாக இப்பூமண்டலத்தையும் தோற்றுவித்துள்ளார். இதில் பல்வேறு பிராணிகளையும் படைத்து, அவற்றின் சிகரமாக மானிட ஜீவர்களையும் படைத்துள்ளார். எதற்காக? எனக் கேட்டால் ''வானுர இன்பம இங்குற'' என்ற பதில்வரும். மண்ணுலகம் விண்ணுலகமாகத்திகழச் செய்வதே பகவானின பரந்த நோக்கம் என அறிய முடிகிறது. தான் படைத்த ஜீவர்கள் தன்னைப் போலப் பரிணமிக்க வேண்டும்என்பது பகவத் தர்மமாயுள்ளது. இதை நிலைநாட்டவே, படிப்படியாக வழிநடத்தவே பகவத் அவதாரங்கள். தெய்வசக்தியின் இறக்கமதான் 'அவதரணம்'. ஸத்-சித்-ஆனந்த சொரூபியான பரம்பொருள் பூமண்டலத்தை தோற்றுவிப்பதில் தனது உயர்நிலைகளை விட்டுக் கீழிறங்கி அஸத்-அசித்-அனந்தம் என்ற கீழ்நிலைகளை மேற்கொண்டார். ஆனல் கீழ்நிலை வந்த பின் மேல் நிலைக்கு வரவேண்டுமல்லவா? கிணற்றுக்குள் குதித்து மூழ்கினவனை, நீர் மேல்நோக்கித் தள்ளுமல்லவா! இநத மேல் நோக்கிய உயர்வைத்தான் பரிணமிப்பு என்கிறோம். *Evolution is necessiated by involution* என்ற ஸ்ரீ அரவிந்தர் வாக்குப்படி இறக்க நிலையைத் தொடர்ந்து ஏற்ற நிலை வரும. இதுவே இயற்கையின், பரமனின கிரியாசக்தியின் சனதன தர்மமாகும். இதை நிலைநாட்டவே அவதாரங்கள். ஜீவனின் முயறசி வெற்றி பெற பரமனின் உதவி நிச்சயம் தேவை.

பிரளய காலத்தில் ஜலமயமாக உள்ள நிலையில் நீர்வாழ் பிராணிகள தோன்றவும் அதைத் தொடர்ந்து மனேசக்தியின் உதயம் ஏற்படவும், பின்னர் அம்மனேசக்தி பரிபக்குவம் கொண்ட ஆதாஷ புருஷன் தோன்றவும், இறுதியாக மனேசக்திஉயர்வில் உச்சநிலை பெற்று தெய்வாம்சம பொருநதிய அதிமானச நிலை எயதவும் வழிவகுத்தவையே மத்ஸ்ய, வராஹ, வாமன. ஸ்ரீராம, கல்கி அவதார புருஷாகளின செயல்கள். பரிணமப் பாதையில் ஒன்றிலிருந்து மற்றொரு புதிய மாற்றம் ஏற்பட அவைகளுக்கிடையே உள்ள நிலையும் ஏறபடும. அவற்றைக குறிப்பவையே கூாம, நரசிம்ம, பரசுராம, கிருஷ்ணவதார லீலைகள. இந்த ஆத்யாதமிக இரகசியம் வாய்ந்த பரிணம நிகழ்சசிகளை மககளுக்கு ஞாபகப் படுத்தும் சந்தர்ப்பஙகளே ஸ்ரீவிஷ்ணு துவாதசி விரதங்களாகப் பரிமளிக்கின்றன.

இப்படிப்பட்ட புருஷோத்தமனின் வழிபாட்டில் மேற்கொள்ளப்படும் நாமாவளி மந்த்ரங்களுள் சிறப்புடன் விளங்குவது துவாதச அக்ஷரங்களைக்

கொண்ட "ஓம் நமோ பகவதே வாஸுதேவாய". மஹாபாரதம் அநுசாசனிக பர்வதத்தில் ஸ்ரீவிஷ்ணு பகவான் நாரதருக்கு உபதேசம் செய்ததாகக் கூறப்பட்டுள்ள மஹாமந்த்ரம் இதுவே.

ओंकार मग्रत: कृत्वा मां नमस्कृत्य नारद।
एकाग्र: प्रयतो भूत्वा इमं मन्त्र मुदीरयेत
॥ १४ ॥
ओं नमो भगवते वासुदेवाय इत्ययम् ॥ १५ ॥
अवशेनापि यन्नाम्नि कीर्तिते सर्वपातकै:।
पुमान् विमुच्यते सद्य: सिंहत्रस्तैर्मृगैरिव
॥ १६ ॥
—अनुस्मृति स्तोत्रम्.

ஆன்ம பிரயாண காலத்தில் மறு பிறப்பின்றி பகவானுடன் ஐக்கியம் பெற 'அனுஸ்மிருதி' என்ற ஸ்தோத்திரத்தில் இம்மந்திரமும் மற்ற ஸ்துதி வாசகங்களும் உள. துவாதசாக்ஷர மந்த்ர சொரூபியான பகவான் பூவுலகில் ப்ரத்யக்ஷ ரூபமாக துவாதச ஆதித்ய சொரூபங்களுடன் ஸ்ரீமன் சூர்யநாராயணனாகவும் வழிபடப்படுகிறார். வருஷத்தில் ஒவ்வொரு மாதத்திலும் ஒவ்வொரு பெயருடன் அதற்கேற்ற பிரகாச ஸக்திவிலாசம் பெற்றவராய் வணங்கப்படுகிறார். மேஷம், ரிஷபம் என்றபடி உள்ள 12 ராசிகளில் சூர்யப் பிரவேசம் நடந்தேறி வருகிறது. இதன் மூலம் சூரிய சக்திக்கும், ராசிகளின் நக்ஷத்ர சக்திகளுக்கும் உள்ள தொடர்பை பூமண்டல ஜீவராசிகள் பெற்று வாழ்கின்றன.

மேற்கூறப்பட்ட 12 மாதங்களுக்கு சைத்ரம், வைசாகம் என்றபடியான 12 பெயர்களும்உண்டு. இப்பெயர்கள் பௌர்ணமி தினத்தன்றுவரும் நக்ஷத்ரங்களின் பெயர்களைக் கொண்டது. ஆகவே இம்மாதங்களில் சந்திர சக்திக்கும், நக்ஷத்ர சக்திக்கும் உள்ள தொடர்பு நிலைகள் பூமண்டல ஜீவராசிகளுக்குக் கிடைக்கின்றன. அவதார புருஷர்களின் துவாதசி திதித் திருநாட்கள் இந்த சாந்திராயன மாதப்படியே வருகின்றன.

சூரியன் ஆன்ம சக்தி சொரூபம், சந்திரன் மனோசக்தி சொரூபம், நக்ஷத்ரங்கள் ஜீவசக்தி சொரூபங்கள். இது அத்யாத்மஇரகசியம். மாதாந்ர வழிபாட்டில் மானிட ஜீவன் தன் மனோசக்தி வலிமையால் ஆன்மசக்தியைப் பிரகாசிக்கச் செய்யவே திதிப் பிராதான்யம் பெற்ற விரதங்கள் அனுஷ்டிக்கப் படுகின்றன. இவ்விரதங்களை மிக எளிய முறையில் அத்யாத்மிக மனோபாவத்துடன், அனன்ய பக்தியுடன், பூரண சிரத்தையுடன் மானஸீகமாகவே அனுஷ்டிக்க முடியும். மானஸீக வழிபாடு மிகவும் பலம் பொருந்தியது. ஸங்கல்ப சக்தியின் வலிமை மஹத்தானது. பிரபஞ்ச சிருஷ்டியே பிரம்ம ஸங்கல்பம்தான். ஆகவே புராணங்கள் குறிப்பிட்டபடி இவ்விரதங்களை அநுஷ்டிக்க இயலாத தற்கால நிலையில், அத்யாத்ம ரகசியங்களை உணர்ந்து மானஸீகமாக மாதந்தோறும் அனுஷ்டித்து பகவானின் உலக பரிணமிப்புக்கான பணிகளில் ஜீவர்களாகிய நமது பங்கையும் செலுத்துவோமாக. நற்காரியங்களின் பலன் அவருடைய நற்பணிக்காகவே அர்ப்பணிக்கப்பட்டதாக ஆகட்டும். 'ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து'

நின்னருளாங் கதியின்றி
மற்றொன்றில்லேன்
நெடுங்காலம் பிழை செய்த நிலை
கழிந்தேன்
உன்னருளுக் கினிதான நிலையுகந்தேன்
உன் சரணே சரணென்னும்
துணிவு பூண்டேன்
மன்னிருளாய் நின்ற நிலை யெனக்குத்
தீர்த்து
வானவர்தம் வாழ்ச்சிதர வரித்தே
னுன்னை
இன்னருளா லினியெனக்கோர்
பரமேற்றுமல்
என் திருமால்! அடைக்கலம் கொள்
என்னை நீயே
—அமிருதாசுவாதினீ-31
(ஸ்ரீதேசிக ப்ரபந்தம்)

★

## இருள் நீக்கி கிராமம்

தஞ்சை மாவட்டம் திருத்துறைப் பூண்டி தாலுக்காவில் "இருள்நீக்கி" என்ற சிறிய கிராமம் உள்ளது. இது ஒரு புண்ணியஸ்தலம். ஸ்ரீமத் ராமாயணத்துடன் தொடர்புடையது. ஸ்ரீராமன் வானரப் படைகளோடு இலங்கையை நோக்கிச் செல்லுகையில் இக்கிராமத்தில் தங்கினார். இரவில் சீதையின் பிரிவாற்றாமையால் சோகமுற்றிருந்த போது, பார்வதி பரமேசுவரர் கட்டளைக்கிணங்க சூரியன் தோன்றி பிரகாசித்தான் இருள் நீங்கியது; ஸ்ரீராமனின் துக்கமும் நீங்கியது. இதனாலேயே இக்கிராமம் 'இருள்நீக்கி" எனப் பெயர் பெற்றது. இக் காலத்திலும் அப்பெயர் நன்கு பொருந்தும் அஞ்ஞான இருளை நீக்கி அருளொளி பரப்பி வரும் காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் ஜனன பூமியாக விளங்கும் காரணத்தாலும் இருள் நீக்கி என்ற பெயர் பொருத்தமாக அமைந்துள்ளது அல்லவா?

## வைபோகமே பாட்டு

நாம் எல்லோரும் கல்யாணம் முடிந்தவுடன் மங்களப் பாட்டுப்பாடுவது வழக்கம். "கௌரி கல்யாணம் வைபோகமே, சீதா கல்யாணம் வைபோகமே, ராதா கல்யாணம் வைபோகமே" என்று நம்முடைய கல்யாண சமயம் வைபோகம் பாடுவார்கள்.

இதனால் நம்முடைய வாழ்க்கையில், கௌரியைப் போல தன்னையே தன் கணவனுக்காக அர்ப்பணம் செய்து கொள்ளவேண்டுமென்பதையும், சீதையைப் போல தர்மத்தின் அடிப்படையின்கீழ் நிழல் போல கணவனுடன் தொடர்ந்து இருக்க வேண்டுமென்பதையும், ராதையைப் போல பக்தியும், அன்பையும் நம்முடைய கணவரிடமும் குடும்பத்திலும் வைக்க வேண்டுமென்பதையும் "வைபோகமே"பாட்டு நமக்கு நினைவூட்டுகிறது.

(தகவல்: ஏ. என். சுப்ரமணியன்.)

# அம்மையப்பர்

## இறைவன்-பெயர் விளக்கம் :

இறைவன் என்னும் சொல் இறு என்னும் சொல்லின் அடியாகப் பிறந்தது. இதற்குப் பொருள் எல லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருப்பவன் என்பதாகும். எல்லாப் பொருள்களின் தோற்றத்திற் கும் முடிவிற்கும் தான் காரணமாக வும், தனக்குத் தோற்றமும் முடிவு மின்றியும இருப்பவன் இறைவன். எனவேதான் மாணிக்கவாசக சுவாமி கள்,

'' போற்றியருளுக நின் ஆதியாம்
பாதமலர்
போற்றியருளுக நின அந்தமாம்
செநதளிர்கள்''

என்று போற்றி மகிழ்ந்தாா. அணு விற்கு அணுவாகவும் மகத்திற்கு மகத்தாயும் விளக்குபவன் இறைவன் என்று உபநிடதங்கள பேசுகின்றன. அவ்விறைவனை நினைக்குநதோறும் நினைக்குந் தோறும் அவன் நமக்கு,

'' உடலும் உயிரும் போல் ஒன்ருகியும்
கண்ணெளியும் கதிரொளியும் போல்
வேருகியும்
கண்ணெளியும் உயிரறிவும போல்
உடஞகியும''

அருள் புரிவான்.

## அம்மையப்பர் ஆன நிலை :

இறைவன் சிவன் சகதி எனத் தன் கண் இரு தன்மையும் தோன்ற அம் மையப்பராய் அமைகிருன. திரு ஞான சம்பந்த சுவாமிகள் இறை வனைத் தமது முதல் திருப்பாட்டி லேயே,

'தோடுடைய செவியன்'

என்று புகழ்ந்துரைக்கிருர். சங்க இலக்கியமான புறநானூற்றின் கட வுள் வாழ்த்துப்பாடல்,

'' பெண்உரு ஒருதிறன் ஆகின்று அவ்
வுருத்தன்னுள்
அடக்கிக்கரக்கினும் கரக்கும்''

என்று கூறுகிறது.

இந்திரனையும் மற்றைய அனைத்து தேவர்களையும் ஒற்றைத் துரும்பில் வலியின்மை காட்டிய இயக்கர் ஒளி வடிவில் மறைநதது கண்டு, இந்திரன் ஹைமவதியுட் உமையும ஆகிய அம் மையைக் கணடு, ''போற்றத் தகுந்த அவ்வியக்கன் யாவன்?'' என வினவு வதாககேனுேபநிடதத்தில் மூன்ரும் அத்தியாயத்தின் இறுதியில் காணப் படுகிறது.

சிவனுக்கு இயல்பாய் அமைந்த பராசக்தியே அறிவு என்றும், வன்மை என்றும், செயல் என்றும் பலவாகக் கேட்கப்படுகிறது என்பதை ஸ்வே தாஸ்வதரோப நிஷதத்தின்,

परास्य शक्ति विदैव श्रूयते ज्ञानपल क्रियाच।

''பராஸய சக்தி விதைவ ச்ருயதே
ஞானபலக்கியாச!''

என்னும் தொடரினுல் நாம் அறிய லாம்.

சிவன் சுந்தரன், சிவகாமி சுந்தரி- ஒருவர் இதயத்தில் மற்றவர் இருக் கிருர். இதனைத்தான் மணிவாசக சுவாமிகள் தமது திருவாசகத்தில்,

'' உடையாள் உன்றன் நடுவில இருக்கும
உடையாள் நடுவுள் நீ இருததி''

என்கிருர். ஸ்ரீ ஆதிசங்கரர் உமா மகேஸ்வரத்தோத்திரத்தில் சிவபெரு மானைத் துதிக்கும்போது,

नमश्शिवाभ्यां अतिसुन्दराभ्यां
अत्यन्तमासक्त हृतमम्बुजाभ्याम् ।
अशेषलोकैक हितङ्कराभ्याम्
नमोनमः शङ्करपार्वतीभ्याम् ।।

நமச்சிவாய்யாம அதிசுந்தராப்யாம்
அத்யந்த மாஸக்த ஹிருதமம்
புஜாபயாம |
அசேஷ லோகைக ஹிதங்கராப்யாம்
நமோநம: சங்கரபார்வதீப்யாம் ||

என்று வடமொழியின் இருமை உரு பைக் கொடுத்து, 'அம்மையப்பராகிய சங்கர பார்வதி என்னும் இணைபிரியா இரட்டையருக்கு வணக்கம்'', என்று பாடி மகிழ்கிருர்.

இப்படியாக இறைவன் சிவன் சக்தி என்று இரு தன்மையாக உள் ளான் என்பதை அறிகிருேம். பரம் பொருள் எங்ஙனம் இரு தன்மைய தாய் இருக்க முடியும்?

## சிவசக்தி வடிவ விளக்கம் :

சூரியன் ஒளியால் தன்னைக் காட் டும்போது, கதிரோன் என்றும் அது பிறபொருளைக் காட்டும்போது ஒளி என்றும் பெயர் பெற்று இரு தன்மை யுடையதாய் இருக்கிருன். அதுபோல இறைவன் முக்தான்மாக்களுக்கு இன்பப் பேரொளியாக அனுபவப் பட்டு நிற்கும்போது சிவமாகவும், உயிர்களுக்கு மாயை என்னும் தன் கண் அடங்கியுள்ள ஜடசக்தியைக் காரியப்படுத்தி உடம்பு, உலகம் முதலியவற்றைக் கொடுத்து அறி வித்து நடத்தும் நிலையில் சக்தியாக வும் காட்சி தந்தருள்கிருன். இந் நிலையையே அர்த்தநாரீஸ்வரர் என்று கூறுகிருேம். எனவேதான் இறை வனை அம்மையப்பராக வழிபடுதல் வேண்டும்.

## வைணவக் கோட்பாடு :

பிராட்டியின் கருணை பெற்றுத் தான் பெருமானின் திருவருளைப் பெற முடியும் என்னும கோட்பாடு வைணவத்திலும் உள்ளது. இராமா யணத்தில் குகன், பிராட்டி இருக்கும் போது வந்து சரணுகதி செய்து உய்தி பெறுகிருன்.

பிராட்டியின் நகைகளைக் கொணர்ந்து இராமனிடம் சேர்ப் பித்து பிராட்டியின் கருணைக்காளா கிப் பின்னரே இராமனின் திரு வருளைப் பெறுகிருன் சுக்ரீவன்.

திரு ஸ்ரீ சீனிவாசன், எம்.ஏ; பி எட்., பரமக்குடி.

வீடணன் திரிசடை மூலம் பிராட்டியின் திருவருள் பெற்று வந்து சரணகதி செய்கிறுன. அதுபோல இலக்குவனும் வனத்திற்குத் தானும் கூட வருவதாகக் கூறும்போது இராமனிடம்,

நீர்உள எனினஉள மீனும் நீலமும
பார்உள எனின்உள யாவும்பாராபுறின
நார்உள தனு உளாய்! நானும்
சீதையும
ஆர்உளர் எனின் உளம் அருளுவாய்!

என்று கூறிப் பிராட்டியை முன்னிட்டே பெருமானின் திருவருளுக்குப் பாத்திரனுகிறுன். பெருமானைத் தவிர்த்துப் பிராட்டியைத் தனியே பற்ற நினைத்த இராவணனும் இப் பிராட்டியைத் தவிர்த்துப் பெருமானைத் தனியே பற்ற நினைத்த சூர்ப்பநகையும் அழிவிற்கு ஆளானர் என்று ஸ்ரீவசன பூஷணம் சொல்கிறது.

ஸ்ரீ ஆண்டாளும் திருப்பாவையில் நப்பின்னைப் பிராட்டியை முதலில் துயிலெழுப்பிய பிறகே கண்ணனைத் துயில் உணர்த்துவதாகப் பாசுரங்களை அமைத்திருப்பதையும் சிந்தித்து உணர்தல் வேண்டும.

மேற்கண்ட உதாரணங்களினுல் அம்மையப்பராக வழிபடுதலை வைணவமும் தம்முடைய கோட்பாடாகக் கொண்டுள்ளது எனபதை நாம் அறியலாம்.

## குமரகுருபரர் கண்ட அம்மையப்பர் காட்சி :

தில்லையமபலத்தில் உடுக்கை ஏந்திய கரம், அழல் உள்ள கரம், அமைந்த திருக்கரம், ஊன்றிய திருவடி, எடுத்த திருவடியும் கொண்டு அற்பதக கூத்தாடுகிறுன் இறைவன். அதனை சிவகாமி அம்மை முதலில் தரிசித்து அதன்பயனை உயிர்களுக்குத் தருகிறுள.

கைக்குழநதையின் குடலில் புண் ஏற்படின் அக்குழந்தைக்கு மருநதைத் தர முடியாத சூழநிலையில், தாய் அந்த மருந்தைத் தான் உணடு பால் மூலம் குழந்தையின் வயிற்றுக்கு மருந்தைச் செலுததுவாள். நாம் சிவகாமி அம்மையின் குழந்தைகள் அன்றே! எனவே அப்பனின் ஒப்பற்ற கருணையை தான் தரிசித்து உயிர்களுக்கு தநதருளகிறுள அன்னை சிவகாமசுந்தரி.

"பால உன குழவி பசுங்குடல பொறுது என
நோய உன மருந்து தாய் உண்டு ஆஙகு
மன்னுயிர்த் தொகுதிக்குந் தன
னருள் கிடைபப
வையம ஈன்றளித்த தெய்வக்கறபின
அருள் சூல் கொண்ட ஐயரித்தடங்கண
திருமான சாயல திருந்திழை காணச்
சிற்சபை பொலியத் திரு நடமபுரியும
அற்புதக் கூத்தன........"

என்பது குமரகுருபரரின் அருள் வாக்கு

எனவே உலக முதல்வனுய் பரம பொருளை அமமையப்பராய்த் தெளிந்து வழிபடுதலே அனைத்து முக்திகளையும் கொடுக்கவல்லது என பதனை சைவ சித்தாநத சாஸ்திரஙகளில் ஒன்றுன திருக்களிற்றுப்படியார்,

"அமமையபபரே உலகுக்கு அமமை
யபபர் என்றுணர்க
அமமையப்பர் அபபரிசே வந்தளிபபர்"

என்று கூறுகிறது.

நாமும எல்லாம் வல்ல இறைவனை அம்மையப்பராகக் கொணடு வழிபட்டு நல்லருள் பெறுவோமாக.



## சிவகங்கை

புராண காலத்தில் குணடோதரன் என்னும் அரக்கன் ஒருவர் சக்தியின மீது மிகுந்த பக்தி கொண்டிருந்தான். ஒரு முறை குண்டோதரனுக்குத் தீராத பசி ஏற்பட்டது. தனது பசியைப போக்கிடுமாறு சக்தியிடம் வேணடினுன். சக்தியும் குணடோதரன் மீது இரக்கம் கொண்டு சிவனிடம் குணடோதரனின் பசி தீரத்தருள வேணடிக்கொண்டாள். சிவபெருமானின கருணையால் குணடோதரன் முன்பு எடுககஎடுக்க குறையாத அன்னக் குழிகள் தோன்றின. பாலும், நெய்யும் கலந்த சோற்றினைப் பசி அடங்கும் வரை குணடோதரன் உணடு முடித்தான். உண்டதும் அவனுக்கு நீரவேட்கை ஏற்பட்டது. அங்கிருநத கிணறுகள், குளங்கள் மற்றும் எல்லா நீர்நிலைகளில் இருந்த நீரைக் குடித்து முடித்தான். எல்லாமும் வறறி விட்டன. அப்பொழுதும குணடோதரனின் தாகம தணியவில்லை. தாகத்தால் மிகவும் வருநதினுன். அது கண்ட உமையவள் இறைவனிடம் குண்டோதரனின் தாகம் தீர்த்தருள வேணடினுள. இறைவனின் ஆணைப்படி சிவபெருமானின் தலைமுடியிலிருந்து கங்கையும் கீழே இறங்கி நீர்ப்பெருக்காக வநதாள். குணடோதரன் தனது இரண்டு கைகளால் ஓடி வரும் வெள்ளத்தை தடுதது நீர் அருந்தி தன்னுடைய தாகத்தைத் தணித்துக் கொணடான். அது முதல் அவ்விடத்தில் ஒரு நதி ஏற்பட்டு அது 'சிவ கங்கை' என அழைக்கப்பட்டு வந்தது. அந்த நதி பாய்ந்த நாடு "சிவகங்கைச் சீமை"எனவும் வழஙகப்பட்டது. பின்னுளில் அந்நதி 'வைகை' என அழைக்கப்பட்டது.

திருவிளையாடற் புராணத்திலிருந்து
முடிவை முத்து

சென்ற இதழ் தொடர்ச்சி

இலக்குவன் கூட பரதனைப் புரிந்து கொள்ளவில்லை. ஆரம்பம் முதல் இராமனுடன் இலக்குவன் சென்றாலும், அவ்வளவு முக்கியத் ஆரம்பத்தில் இல்லை. இராமனுக்கு நாடில்லை, என்று கேள்விப்பட்ட வுடன்தான், இலக்குவனின் உண்மை யான குணம் தெரிகின்றது.

இராமனுக்கு நாடில்லை என்று கேள்விப்பட்டவுடன் அவன் அடை கின்ற கோபத்தைக் கம்பர் பின்வரு மாறு காட்டுவார். கைகேயி இரண்டு வரத்தினால் பரதனுக்கு நாட்டை அளித்தாள் என்ற செய்தியை கேள்விப்பட்டவுடன்,

'' கண்ணில கடைத்தீஉக; நெறறியில
கற்றை நாற;
விண்ணில சுடருமகெட; வெய்யினில
நீர்விரிப்ப;

அதனால் அடைகின்ற சினத்தின் உச்ச நிலையில்,

'' குதித்தனன பாரிடைக் குவடு நீறெழ
மிதித்தனன் இராமனை விரைவின்
எயதினான்
மதித்திலன் பரதன்நின மேல்வந்
தான்மதில
பதிப்பெருஞ சேனையின் பரபபினான
எனறான்''

*(அயோத்தியா காணடம்-1098.)*

என்றெல்லாம் ஆர்பாட்டமாய்ப் பேசுகிறான.

இவ்வாறு எடுத்ததிற்கெல்லாம் கோபமுறும இலக்குவன், உண்மை பரதனைப் புரிநது கொள்ளவில்லை. அவனைப் போலவே ஒரு சகோதரனாக ஒத்துக் கொள்ளப்பட்ட குகனும் பரதனைப் புரிந்து கொள்ளவில்லை. இலக்குவன் எணணியது போன்றே தூரத்தில் இருந்து நோககிய குகனும் பரதனைத் தவறாகவே எண்ணுகின்

வில்லை. கூனி, வசிட்டன், சுமந்திரன், சுமத்திரை போன்றோர் கூடப் பர தனைப் புரிந்து கொள்ளவில்லை.

இவாகள் இப்படி இருக்க இராமன் மட்டுமே பரதனைப் புரிந்து கொண் டிருககிறான். ஆரம்பம் முதற்கொண்டு அவனைபபறறி நன்முறையில் பேசு கின்றான். அவனின் ஒவவொரு வார்த்தையிலும், செயலிலும் அவன் பரதன்மேல் கொணடிருந்த ஒப்புயர் வற்ற காதலின் திறம் நமக்குப் புரி கின்றது.

இராமன் இலக்குவனின் சீற்றத் தைத் தணிவிக்கக் கூறுகின்ற சொற் கள நம் கணணில நீர் வரவழைக்கக் கூடியவை. பரதன் தன் மேல் கொண் டிருந்த அன்பின் திறத்தினை அவன் எததனை ஆணித்தரமாய் எடுத்து இயம்புகின்றான்? 'இலக்குவனே! பர தனைப் பற்றி இவ்வாறு எணண எவ் வாறு உன்மனம் இடம் கொடுத்தது?'

# பின்னவன் பெற்ற செல்வம்

உள்நிற் கும்உயிர்ப் பெனும்ஊதை
பிறக்க நிறை
அண்ணல் வெபரியோன் தனதுஆதி
யின் மூர்த்தி யொத்தன்.''

*(அயோத்தியா காண்டம்-411.)*

என்று கொதிக்கின்றான். அதோடு மட்டுமா? இராமனிடம, 'உலகு ஏழி னோடு ஏழும், மன்னா குலக்காவ லும் இன்று உனக்கு யான் தருவேன. அதைத் தடுபபவர் தேவரேனும். துய் யைச் சுடுவெஞ்சனலில சுடுவான துணிந்தேன்' என்று கூறுகிறான. இத தகைய இலககுவனை, இராமன் ஒரு வாறு சாமாதானப் படுததுகின்றான்.

பின்னர் காட்டில் இராமனைக் காண பரதன் வருகிறான். தூரத்தில் பரதன் வருகிறான், என்ற செய்தி அறிந்த இலக்குவன், காட்டிலும் இராமனோடு போரிடவே பரதன் வரு கிறான் என்று தவறாகக் கருதுகிறான்.

றான். அதன் விளைவாக, இராம இராஜ்ஜியம் தன்னால் அமையப் போகின்றது என்று குகன் கருது கிறான். பரதனோடு வரும் இப்படை வீரர்களை எமனுலகுக்கு அனுப்பி இராமனுக்கு முடி சூட்டுவேன் என்று உறுதி கொள்கிறான். அதன் காரண மாய்,

'' தோன்றிய புளினரை நோக்கிச்
சூழ்ச்சியின
ஊனறிய சேனையை உம்பர் ஏற்று
தறகு
ஏனறனன என்உயிர்த் துணைவறகு
ஈகுவான்
ஆன்றபே ரரசுநீர அமைதி ராம
என்றான்''

*(அயோத்தியா காணடம்-1010.)*

இவ்வாறு குகன் பரதனைப் புரிந்து கொள்ளாமலேயே பேசுகிறான். இவர் கள் மட்டுமா? அரணமனையில் இருந்த ஒருவரும் பரதனைப் புரிந்துகொள்ள

என்று கேட்கின்ற அந்த உயர்நத நெஞ்சைக் கம்பன்,

'' பெருமகன்; என்வயின் பிறந்த
காதலின்
வருமென நினைகையும், மணனை
எனவயின்
தருமென நினைகையும், தவிரத்
தானையால
பொரும்என நினைகையும், புலமைப்
பாலதோ?''

*(அயோததியா காணடம்-1116.)*

திரு. வ. ஜோதி, M.A.,
புதுப்பேட்டை

என்று கூறியவாறு அமைத்துக் காட்டுவான். இப்படியெல்லாம் பர தனைப் பற்றி எணணிய இராமன் எடுத்த எடுப்பில் கைகேயி 'ஆழிசூழ் உலகமெலாம்' எனத் தொடங்கும் போதும், தன்னுடைய மனதில் பர தன் கண்டிப்பாய் நாடேற்கச் சம்

மதிக்கமாட்டான் என்றே திடமாய் நம்பினன். ஆயின் அவன் எண்ணம் பற்றி கம்பர் வெளிப்படையாய்க் கூறவில்லை. களங்கம் இல்லாத பரதனைப் பற்றி, ஆரம்பம் முதலே இராமனும் தவறில்லாத எண்ணமே கொண்டிருக்கிறன். ஆயின் அதைப் பேச இராமனுக்கு அது சந்தர்ப்பமில்லை.

அவன் தன் தாய் கைகேயியை நோக்கி "மன்னவன் பணியன்றாகில் மறுப்பனே?" என்று கூறத் தொடங்குகின்றன். அரசனுடைய பணி என்று சொல்கின்றீர்களே, தங்களுடைய பணி என்றால் மறுத்தும் விடுவனே? 'என்பின் பிறந்தவனான பரதன் பெற்றிருக்கின்ற 'செல்வம்' நான பெற்றதன்றே? என்று கூறுகிறன். இவ்வார்த்தைகளை நாம் கூர்ந்து நோக்கினல் இராமனின் சரியான எண்ணம் புலப்படும்.

"தாயே! இரண்டு வரங்கள் மூலம் ஒன்றால் பரதன் நாடாளவும், மற்றொன்றால் நான் காடாளவும் பணித்துள்ளீர்கள். நான் தாழிரும் சடைகள் தாங்கி, தாங்கரும் தவம் மேற்கொண்டு, பூழி வெங்கானகம் சென்று, புண்ணியத் துறைகளில் நீராடவும் பணித்துள்ளீர்கள். ஆயின் நான் இவ்வாறு நாட்டை விட்டு காடு சென்றேன், என்று பரதன் எத்தருணத்தில் கேள்விப் பட்டானே, அத்தருணமே அவன் பெருத்த துன்பம் அடைவான். என்னைப் போன்றே அவனும் சடைகள் தாங்கி, தவம் மேற்கொண்டு, காட்டு வாழ்க்கைக்குத் தயாராகி விடுவான். அவனின் மிக உயர்ந்த உத்தம குணம் எனக்கு மட்டுமே தெரியும். நான் காட்டில் இருக்க அவன் ஒரு காலும் நாடாள மாட்டான்." என்ற பொருளில் பேசுகிறன்.

ஆக, இரணடு வரங்கள்மூலம் தாங்கள் பரதனுக்குச் சம்பாதித்துத் தருகின்ற 'செல்வம்' தவம் மேற்கொண்ட காட்டு வாழ்க்கையே! என் பின்னவனான பரதன என்னைப்பற்றிக் கேள்விப்பட்டு அடைகின்ற அக்காட்டுத்துறவு வாழ்க்கையை முன்னவனான நான் அவனுக்குச்சற்று முன்னதாகவே அதனைப் பெற்றுக் கொண்டு விட்டேன். அவ்வளவுதான்! இவ்வரங்கள் மூலம் இருவரும் இவ்வாழ்க்கையை சற்று முன் பின்னாகப் பெறுகிறேமே தவிர வேறு வித்தியாசமில்லை.

அதனால்தான் இராமன் "என் பினனவன் பெற்ற நாடு" என்று சொல்லாமல் 'செலவம்' என்று மறைமுகமாகக் கூறுகிறன். இப்பொருள் கொணடால் இராமன் எந்த இடத்திலும் பரதன் நாடாள மாட்டான் என்று நம்புவதற்கு ஏற்பவும் சரியாய் அமைகிறது. பாடல் இதோ:

> "மனனவன் பணியன் றாகில் நும்பணி
> மறுபப னோஎன
> பின்னவன் பெற்ற செல்வம் அடிய
> னேன பெற்ற தன்றே?
> என்னிதின் உறுதி அபபால் இப்பணி
> தலைமேற் கொண்டேன்
> மின்னெளிர் கானம இனறே போகின்
> றேன் விடையும கொண்டேன்."
>
> (அயோத்தியா காண்டம்-295.)

பின்னவன் பெற்ற செல்வம் 'தவ வாழ்க்கையே' என்று ஆணித்தரமாய் இராமன் குறிப்பிட்டுக் காட்டுகிறன். அவ்வாழ்க்கையை சற்று முன்னதாக அடியேன் பெற்றுக்கொண்டேன் என்று பொருள் கொணடால் இராமன் பரதனிடம் எத்தனை நம்பிக்கை வைத்திருந்தான் என்பதின் உச்ச கட்டத்தைக் காட்டவும் இவ்வரிகள் பெரிதும் துணை புரியும்.

அதுபோன்றே அவன் கூறுகின்ற கூற எணணுகின்ற அத்தனைத் தன்மையோடும பரதன் வருகிறன். அதை நுட்ப அறிவால் உணரும் இராமன், நுட்பமாக முன்னதாகவே இவ்வார்த்தையைப் பயன் படுத்தினன் எனலாம். குகன் பரதனைக் காணும் போது அவன் அடைந்த நிலையை,

> "வற்கலையின உடையானை; மாசடைந்த
> மெய்யானை;
> நற்கலையின் மதியன்ன நகை
> இழந்த முகத்தானை
> கற்கனியக் கனிகின்ற துயரானைக்
> கண்ணுற்றான்
> விற்கையினினறு இடைவீழ
> விமமுற்று நினறொழிந்தான்"
>
> அயோததியா காண்டம் 1027

என்று கூறுகிறன் கம்பன்.

இப்பேற்பட்ட நிலையை உடைய பரதனை ஒருவரும் ஆரம்பத்தில் புரிந்து கொள்ளவில்லை. அவனை நன்கு புரிநதுகொண்ட இராமனும் அவற்றை வெளிப்படையாக உணர்த்த முடியவில்லை. புரிந்து கொண்ட அவனும் ஏற்ற கருத்தியே தன் தாய் கோசலையிடமும் நுட்பமாகக் கூறுகின்றன்.

அவன் தன் தாயிடம் 'நின் காதல் திருமகன் பங்கமில் குணத்து எம்பி பரதனே துங்க மாமுடி சூடுகின்றன்' என்கிறன். அங்கு நாடு தம்பிக்கு என்று சொன்ன கைகேயியின் கூற்றை அப்படியே சொல்ல வேண்டிய நிலையே தவிர, அதைச் சொல்கிறனே தவிர தன்னுடைய கருத்தைக் கூறவில்லை. இத்தகைய நிலையில் தன் கருத்தையும கூறமுடியாது, குழைக்கின்ற கவரி இன்றி, கொறறவெண்குடையுமின்றித் தனியனாக வந்தவனைக் கண்ணுறறுத் தவிக்கின்ற அத்தாய் முன் கைகேயியின் கட்டளையையே சொல்ல வேணடிய கட்டாயம் அவனுக்கு. தன்னுடைய கருத்தை இராமன் இங்கெல்லாம வெளிப்படுத்தி இருப்பின், அவனுடைய குண விசேடங்கள் குறைநது போய் இருக்கும். அவனிடம் நாடு விரும்பிப் பேசுகிறன என்று குறை காணவும் வழி ஏற்படும்.

இவையெல்லாம் இராமன் மனதில் கொண்டே, வேணடிய இடத்தில் வேணடிய வார்த்தையைப் பயன் படுத்துகினறன். அவசியம் வாய்க்கும்போது இலக்குவனிடம் தெளிவாய் உரைக்கிறன் அயோததியில இருக்கும் வரை இராமன் இதை வெளிப்படையாய்ச் சொல்லாததால் இன்னும் அவன் உயிர் குணத்தனனாக மாறுகிறன்.

இதனல் கம்பன் காட்டுகின்ற பரதன பெரிதும உத்தமன். அவனுடைய உணமை நிலையை மந்தரையின சூழ்ச்சியும, கைகேயின் பிடிவாதமும் உலகுக்கு உணர்த்துகின்றன. இல்லாவிடில் பரதன் பெரிதும் உத்தமன் எனபது உலகிற்கு தெரியாமல் போய் இருக்கும். பின்னல் கோசலை கூறுவது போல் கைகேயின செயல் பரதனுக்கு பெரிதும 'நலமாயிற்று' எனலாம். அவனை உண்மையில் நன்முறையில் புரிநதுகொணட இராமன் அவற்றை தக்க இடத்தில் வெளிப்படுத்துகிறன். ★

# ஸாள க்ராமம்

ஸ்ரீய: பதியாய், அவாப்த ஸமஸ்தகாமனாய் ஸகல கல்யாண குணாத்மகனாயுள்ள ஸர்வேச்வரனின் நிலைகள் பர, வ்யூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என பரஸ்வரூபம ஐந்து வகைப்படும். இதில் அர்ச்சாவதாரமாவது :- "அடியார்கள் யாதொன்றைத் தனக்குத் திருமேனியாகக் கோலுகிறார்களோ அத்தையே தனக்கு வடிவாகக் கொள்ளும்." என்று சொல்லுகிற, 'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே' என்கிற பொய்கையார பாசுரப்படியே. ஆச்ரிதரான சேதநர்கசு அபிமதமான ஸ்வர்ண ரஜகாதி சிலாபர்யந்தமான ஏதேனுமொரு த்ரவ்யத்திலே திவ்ய மங்கள விக்ரஹத்திலே ஸன்னிதி பணணி, 'ஸர்வ ஸஹிஷ்ணு'வாகை யாலே அவரவர்கள் செயயும் அபராதங்களைக் காணக் கண்ணிட்டு அர்ச்சக பரதந்த்ரமான, ஸ்னானம், போஜனம, சயனம் முதலான ஸமஸ்த வ்யாபாரங்களையுமுடையனாய்க் கொணடு எழுந்தருளி நிற்கும்நிலை."

ஸ்ரீவசந பூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் பரத்வாதிகளினுடைய தௌர்லப்யத்தையும் த்ருஷ்டாந்த முகேந காட்டி அழகாக அருளிச் செய்து இருக்கிறா. அதாவது "பூகத ஜலம் போலே அந்தர்யாமித்துவம். ஆவரண ஜலம் போலே பரத்வம், பாற்கடல் போலே வ்யூஹம். பெருக்காறு போலே விபவங்கள், அதிலே தேங்கின மடுக்கள் போலே அர்ச்சாவதாரம்." மாமலராள் புணர்ந்த பொன் மார்பனை எப்பெருமான், "கொங்கும் குடந்தையும், கோட்டியூரும் பேரும் எங்கும் திரிந்து விளையாடுமென் மகன்" என்கிற படியே ஆங்காங்குப் பல க்ஷேத்திரங்களில், "ஆச்ரித வாத்ஸல்யைக ஜலதே" என்கிறபடியே அர்ச்சாவதார சுலபனாய் ராமன, கிருஷ்ணன் முதலான பல திருமேனி கொண்டுகந்தருளி, நின்றும், இருந்தும், கிடந்தும், ஸேவை ஸாதிக்கின்றான். அத்திவ்விய திருப்பதிகள், ஸ்வயம் வ்யக்தம், தைவம், ஆர்ஷம், ஸித்தம், மாநுஷம் எனப் பலப் பிரிவினராய் அமைந்துள்ளன. திருவெள்ளியங்குடி, திருவிந்தளூர முதலான ஸ்தலங்கள் தைவம் எனப்படுகின்றன. ஆர்ஷம், ஸித்தம என்பவை மனிதர்களில் சிறநத தவயோக ஸித்த புருஷர்களாலோ, அரசர்களாலோ ஸ்தாபிக்கப்பட்டும ஆராதிக்கப்படுவதாகும். தைவம் என்பது இந்த்ராதி, தேவர்களினல் ஸ்தாபிக்கப்பட்டதாகும். மாநுஷம் என்பது அரசா, பெருமக்கள்முதலான சிறப்புமிக்க மனிதர்களால் பலவகையில் திருப்பணிகள் செய்து வளாக்கப்பட்டதாகும். ஸ்வயம் வ்யக்தம் என்பது அரசர்களாலோ, மனிதர்களாலோ ஸித்த தவயோக புருஷர்களாலோ ஸ்தாபிக்கப்பட்டும், திருப்பணிகள செய்யப்பட்டும் தோன்றாமல் பகவத் ஸங்கல்ப முகேந இச்சா மாத்திரத்தில் தோன்றுவதாகும். "அடியோமுக்கே யெம்பெருமானல் லீரோ நீர் இந்த ளூரீரே" என்ற திருமங்கை ஆழ்வாரின் மங்களாசாஸநப்படிகளு, எம்பெருமான் ஆச்ரிதர்களான சேதனர்களுக்காகவே அர்ச்சாவதார மூர்த்தியாய், ஆவிர்பவித்து, ஸ்ரீரங்கம், ஸ்ரீ முஷ்ணம், திருமலை முதலான ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்களில் கோயில் கொணடெழுந்தருளியிருக்கின்றான்.

ஸ்வயம் வ்யக்த க்ஷேத்திரங்கள் எட்டு. அவை முறையே: 1) ஸ்ரீரங்கம் (2) ஸ்ரீமுஷ்ணம் (3) வெங்கடாத்திரி (4) சாளக்கிராமம் (5) நைமிஸம் (6) தோத்தாத்திரி என்னும் வானமாமலை (7) புஷ்கரம் (8) பதரிகாசரமம் எனப்படும். எம்பெருமான் "அர்ச்சிஷ்மான் அர்ச்சித:" என்று போற்றப்படுபவனாய் அர்ச்சாவதார முதல்வனாய் ஸ்ரீரங்கத்திலும், "வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத் தரவிணையான்" என்ற படிக்கு திருவேங்கட மலையிலும், ஞானப் பிரானாக ஸ்ரீ முஷ்ணத்திலும், ஆரண்ய ரூபியாக நைமிஸாரணயத்திலும், தோத்தாத்ரி நாதனாக வானமாமலையிலும், தீர்த்த ரூபியாய் புஷகரத்திலும, எம்பெருமான் நாராயண ரிஷியாக எழுந்தருளி நரனுக்குத் திருமந்திரோபதேசம் செய்து, பதரீநாராயணனாக பதரியிலும் எழுந்தருளியிருக்கின்றான்.

கோ. க. வா. கோவிந்தராஜ
பாவனாசார்யா ஸ்வாமி,
திருச்சி.

ஸாளக்ராம தராதரே ஸுபகரே
ஸ்ரீ சக்ர தீரததாஸ்ரயே,
ஸ்ரீமூர்த்திஸ் ஸகலைஸ் ஸமர்ச்சித,
பதத் வந்த்வோ ஹ்யூதீசிமுக:|
ப்ரஹமே ஸாந வரப்ரதாந ஸுமுக:
ஸ்ரீதேவிகாவலலப:
ஸ்ரீமத் வ்யோம விமாந பூஷித தநுர்
நாநாக்ருதீராஜதே ||

என்ற படிக்கே ஸ்ரீமூர்த்தியாக சாளக்ராம க்ஷேத்திரத்தில் எழுந்தருளியிருக்கின்றான்.

அயோத்யையிலிருந்து பிக்நோதோர் என்ற இடம் வரை ரயிலில் சென்று அங்கிருந்து நேபாள நாட்டில் 80 மைல் சென்று, தலைநகர் காட்மாணடு சென்று, அங்கிருந்து 60மைல் பாதசாரியாய் சென்று சாளகராம திவ்ய க்ஷேத்திரத்தை அடையலாம்.

நேபாள அரசாங்க அனுமதி பெற்று அவர்களின் பாதுகாப்பு உதவி கொண்டு சாளக்ராம யாததிரை செல்ல வேணடும். சாளக்ராம க்ஷேத்திரத்தில் எம்பெருமானின் திருநாமம் ஸ்ரீமூர்த்திப் பெருமாள், தாயார் ஸ்ரீதேவி நாச்சியார், கநக விமாநம், கண்டகீ நதி, நின்ற திருக்கோலததுடன் எம்பெருமான் எழுந்தருளி இருக்கின்றான். கண்டகி என்ற வேஸ்யைக்கும, ப்ரஹ்ம ருத்ராதிகளுக்கும் பிரத்யக்ஷம்.

கண்டகி நதியில் ஸ்வயம் வ்யக்தமாக ஸாளக்ராம மூர்த்திகள் உற்பத்தி ஆகின்றன. ஸாளக்ராமம் என்பது உருண்டையாகவும் நீண்ட வடிவமாயும், நாவல் பழம் போன்று கருத்தும், வழவழப்பாயும், மிருதுவாயும், பள பளப்பு உள்ளதாயும் ஒருவித கூழாங்கல் மாதிரியும இருக்கும். சிறிய மிளகிலிருந்து, பெரிய மாம்பழம் வரை பெரியதாகவும் இருக்கும். சாளக்ராமங்கள் உற்பத்தியாகும் மலையில் கற்கள் ஒன்றோடு ஒன்று மோதிக் கொண்டும், அம் மலையிலேயே உற்பத்தியாகும் நதியில் வேகத்தோடு உருண்டும் விழுகின்றன. அவ்விதம் கணடகீ நதியில் விழுகின்ற கற்கள் ஸாள க்ராமங்களாய் திருவாராதனத்திற்குப் பயன் படுகின்றன. அவை சூரிய வெப்பத்தாலும், ஒளியாலும், பிங்கள வர்ணமாகவும், பெரிதாகவும மாறுகின்றன. ஸாள க்ராமங்கள் ஒவ்வொன்றினுள்ளும் கோரைப் பற்களுடன் கூடிய கொடிய கிருமிகள் கோடிக கணக்காக வந்து துளைத்துத் துவாரமாக்கி உட்புகுந்து தமது கோரைப் பற்களால் கோழி போல கொத்திக கொத்திச் சேர்த்து, அவறறில் ஒவ்வொன்றையும சக்கரம் முதலான சின்னங்களாகச் செய்து, பகவத் அவதார மூர்த்தங்களாகச் செய்கின்றன. கோரைப் பற்களுடன் கூடிய கிருமியை, "வஜ்ர கீடம்" என்று அழைப்பர். 'வஜ்ஜிர கீடம்' என்பது ஒரு புழு என்றும, அது ஒரு வகை பொன்வணடு என்றும், இப்படிமாக அந்த ஜீவனை பலவிதங்களாகச்சொல்கின்றனர். ஆனுல் அதனை நேரில கண்டவர் எவரும் கிடையாது. 'வஜ்ஜிர கீடம்' என்ற ஐந்துவை ஒரு 'வணடு' என்றே வைத்துக கொள்ளலாம். இயற்கையில் வண்டுகள் மணணைத் தன உமிழ்நீரில் சிறிதுசிறிதாக உருண்டைகள் ஆக்கி, கொணடு செல்கின்றன. தேனீ மணணை எங்கிருந்தோ கொணடு வந்து அழுத்தமான தேன் கூட்டைக்கட்டுகின்றன. சிலந்தி தன் உமிழ் நீரால் அழகான கூடு கட்டி வாழ்கின்றன, குளவிகள் மணணைக் கொணடுவந்து தன் உமிழ் நீரால் கூடுகள் கட்டுகின்றன. இதே போல் மலைக் குகைக்குள் வசிக்கும் ஒருவகை வண்டு பனிக் காலத்தில் கற்களைத் துளைபோட்டு உள்ளே வசித்து விட்டு, பனி கரைநததும் வெளியே வருகின்றது இது தான் ஸாள க்ராம சிலை எனப்படும். பனிக்காலங்களில் ஸாள க்ராம சிலையினுள் இருக்கும் பொழுது 'வஜ்ஜிர கீடம்' என்னும் வண்டானது, தனது கூர்மையானதும் உஷ்ணஜ்வாலை உள்ளதுமான கால்களால் சுறறும் பொழுது, ரேகைகளை படியவைக்கின்றன. அநதக் கூட்டிறகுள் பலஇடங்களில் உட்கார்ந்து சுற்றுவதால் பலவித ரேகைகள் உணடாகின்றன. நித்யசூரிகள் வஜ்ஜிரகீடம் என்ற பொன்வண்டு ரூபத்தில் ஸாள க்ராம கற்களைத் துளைத்து உள்ளே பலவித பகவத் சக்கரங்களை உண்டாக்கிப் பனிக் காலத்தில வசித்துவிட்டு, பனி கரைந்தஉடன் கூடடிவிருநதுவெளிப் போந்து செனறு விடுகிறுர்கள். ஸாள க்ராம சிலைகளில் தங்க ரேக்குகள படிநதுள்ளன. எனவே இவைகளை நேபாள அரசாங்கத்தினர் சிலைகளை பிறர் எடுககாதபடிக்கு கஜானுவுக்கு பந்தோபஸ்துடன் எடுத்துக் கொண்டு போய், அதில் படிந்துள்ள தங்க ரேக்குகளை எடுத்துவிட்டு, பின்னர் கண்டகீயின் ஓரங்களில் ஸாள க்ராமங்களை எறிந்து விடுகின்றனர்.

முக்தி நாத் என்னும் இடம் சுமார் 12500 அடி உயரத்தில் இருக்கிறது. அதற்கும்மேலுள்ள ஸாள க்ராம மலையிலிருந்து, கண்டகீ நதி ஆரம்பம் ஆகிறது. அந்த மலைச்சாரல் சுமார் 17000 அடிககு மேல் இருக்கிறது. அந்த இடத்திற்குச் சரியான பாதை இல்லை. எபபொழுதும், எக்காலத்திலும் பனி நிறைந்தே இருக்கும். பின்னுல் கீழ் பாகத்தில் மலை அடி வாரத்தில் வண்டுகள் கூடு கட்டி வாழ்ந்து விட்டு வெளியே போன பின்னர் வரும் ஸாள க்ராம சிலைகளைததான் பொறுக்கி எடுத்து வைக்கிறுர்கள். ஸாளக ராம மூர்த்திகள் அநேக வித அடையாளங்களுடன் இருக்கும். அதனின் காத்ரம், சிறு மிளகின் அளவில் இருநது, பம்பளிமாஸ் அளவு வரையும் இருக்கும். அபூர்வமாக வெள்ளை மஞ்சள், நீலம், பழுப்பு, சிவப்பு முதலிய வர்ணங்களில் அகப்படலாம். அவற்றில ஒரு துவாரத்தினுள் நாலு சக்கரமும, மேலே வனமாலையும், விசித்திரமாகக் காணப்படும் ரதாகாரமும், நீருண்ட மேகம் போல் நிறமுள்ளதும் லக்ஷ்மீ நாராயணர் என்றும், வனமாலையில்லாமல் இருப்பவை லக்ஷ்மீ ஜனர்த்தனர் என்றும் வழஙகப்படும். இரணடு துவாரத்தினுள் சக்கரம் நான்கும், வனமாலையில்லாமல் ரதாகாரமாக உருக் கொண்டது ரகுநாதர் என்றும், மிகச சிறியதாய், இரணடு சக்கரங்களை மட்டும கொணடது வாமனர் என்றும், சிறிய தோற்றத்தோடு வனமாலை யோடு, இரணடு சககரங்கொணடது ஸ்ரீதரர் எனறும வழங்கப்படும். இனி சில ஸ்ரீ மூர்ததிகளின் லக்ஷணங்களைக காணபோம் அவையாவன;

## ஸ்ரீ மூர்த்திகளின் லக்ஷணங்கள் :-

1. **வாஸுதேவர் :-** இந்த ஸாள க்ராம சிலையின் துவாரத்திற்குள் இரண்டு சக்கரங்களும் வெணமை நிறம உள்ள தாகவும் இருக்கும்.

(28-ம் பக்கம் பார்க்க)

# வைணவ வினா - விடை

வித்வான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யர்.

வேதம் இதன சிறு விளக்கம் என்ன?

வேதம் என்பது சம்ஸ்கிருதச் சொல். இதனைச் சந்தஸ் எனப் பொதுப்படையாகவும, ஆம்னுயம், க்ரனசரஸவதி, சருதி, நிகமம, த்ரயீ எனச் சமஸ் கிருதத்திலும், தமிழில் ஆரணங்கள், எழுதாக கிளவி, செவிச்செல்வம், மறை, ஓத்து, வாய்மொழி எனவும் அழைப்பார்கள். இது முதலில் கூறு கட்டாத கனிககுவியல்களெனவும், கட்டுவதற்குமுன் சிதற வைத்திருக்கும் கட்டடத் தடவாள சாமான கள் போலவும் இருந்தன. இதனை மூலவேதம் என அழைத்தனர். இது வியாசருககு முன்பு இப்படித் தான் இருந்திருக்கவேண்டும. பிறகு பாதராயணர், த்வைபாயனர், சத்யவதீபுத்ரன், பகவான், ஸர்வக்ஞர் என்றெல்லாம் மரியாதையுடன் அழைக்கப்படும் வியாசர் இதனை நானகாகப் பிரித்தார். 'வியாஸம' என்ற சம்ஸ்கிருதச் சொல்லுக்கே வகுத்தல், சேர்த தமைத்தல், விவரித்தல் என்றெல்லாம் பெய ராகும். ருக், யஜுஸ், ஸாம, அதர்வாங்கிரஸ் அல்லது அதர்வணம் என நான்கு வேதங்களாகும். இவைகளில் ருக்வேதம் அதர்வணம் செய்யுள் நடையும் யஜுஸ் வசனநடையும் சாமம இசைக்கு ஏற்றமளிக்கும் செய்யுள் நடையும் கொண்டவை. அதர்வண வேதத்தில் பெரும்பாலும ஆயுதங்கள், அஸ்த்ரங்கள், மாந்த்ரீகம், பிறருககுக கெடுதல தரவல்ல ஆபிசாரிகம், அரசியல் போன்ற கருத்துள்ள மந்திரப்பகுதிகள் நிரம்பியுள்ளன. சாதுக்களாய் பிறர் நலத்திலேயே நோககம கொணடு இரககம் தோய்ந்த தந்நலமற்ற மகான்கள், இந்த அதர்வணப் பகுதியை ஆதரிக்காது விட்டு, மற்றைய மூன்று பகுதிகளையே முக்கியமாகக்கொணடு ஆதரித்தனர். அதனுல் வேதத்துக்குத் 'தரயீ' எனக குறுகியபெயர் ஏற்பட்டது. வியாஸர் இநத நான்கு வேதங்களை யும் தனககுப்பின நனகு பாதுகாக்கத தனித்தனி யாகப் பொறுப்புககட்டி, சுமநது என்ற ரிஷியிடம் ருக்வேதத்தையும், வைசம்பாயனா என்பவரிடம யஜுர்வேதத்தையும், ஜைமினியிடம சாம வேதததை யும், பைலரிடம் அதர்வண வேதத்தையும் ஒப்படைத தார். இவைகள் ஒவ்வொன்றுக்கும் பல பிரிவுகள் கொண்ட சாகைகள் பல உண்டு. அந்தணர்கள் அவர வர்களின் வழி வந்த சாகைகளையே முககியமாக முத லில் ஓதி அறிய வேணடும். இததகைய வேதங்களின் பெருமைபற்றி நம் முன்னோர்களான மகரிஷிகளும், மகான்களும் வாய் மணக்கப்பேசாதாரில்லை. மனு என் பவர் கூறும் பொழுது "பிபர்த்தி ஸர்வபூதானி வேத சாஸ்த்ரம் ஸனுதனம" என்ற செய்யுளால் எவன் முறைப்படிக்கு நமக்கிட்ட சாஸ்திர வழியில் நின்று வேதம் ஓதுகிறுனே, அவனுல்தான் இந்த உலகத்தில் சாந்தி, இன்பம், தழைத்திருக்கும். பெய்யவேண்டிய காலத்து மழையும், காயவேணடிய காலத்துக் கதி ரொளியும் படரும். தர்மம்தான், நாட்டளவிலும், தனிப்பட்ட ஒரு மனிதன் அளவிலும் எல்லா நலத்திற் கும்காரணம. "சுகம் வாஞ்சந்தி ஸர்வே$_2$ பிதச் சதர் மஸமுத்பவம்" என்பது மூதுரை. அந்தத் தர்மங் களின் மணிப்பேழையே வேதங்களாகும். வேதத் தையே தர்ம வடிவமாகவும் கூறுவதுண்டு. இந்த வேதங்களில் முதலாவதாகவும் ஆராய்ச்சிக்குரிய நிலைககளமாகவும் உள்ளது ருக்வேதமாகும். இதற்கு 21 சாகைகள. சாகை என்றுல் மரக்கிளை-பிரிவு; வகுப்பு வழி என்ற கருத்தாகும். இந்த ருக்வேதத் தில் 10 மண்டலங்களும் 10552 மந்திரங்களும் அடங்கியுள்ளன. இது செய்யுள் வடிவாக இருக்கும். ருக்வேதம் படித்தவனை ஹோதா எனவும் அழைப் பர். இரண்டாவதாக யஜுர் வேதமாகும். இதற்கு 101 சாகைகள். இது உரை நடையில் உள்ளது. இதில் 40 அத்தியாயங்கள் 1975 மந்திரங்கள் உள் ளன. இது கிருஷ்ண யஜுர்வேதம், சுக்ல யஜுர் வேதம் என இருவகைப்படும. இதை ஓதியவரை அத்வர்யு எனவும் அழைப்பர். மற்றும் இதில் ஆரண் யகம் காடகம் என்ற பகுதிகளும் உண்டு. அத்துடன் 7 காணடகம் கொணட சம்ஹிதை, மந்த்ரப் பிரச் னங்கள், பஞ்சாதி என்ற பிரிவும் உண்டு. அதன்பின் சாம வேதம. இந்த வேதத்தில் ரதந்திரம், வாரவந்தீ யம என்பன போனற இசைதான முககியம். "ஸாம கீத" எனற வழககுணடு. இதறகு 1000 சாகைகள் 1875 மநதிரங்கள உணடு. இது "கானப்ரிய. கேசவ" என்ற வாக்குமபடிக்கும், 'பதத் ஸாவ காயந்நாஸதே' என்ற மறைவசனபபடிககும் கடவுள் களுககு மிகவும் பிடித்தமான வேதமாகும இது. இந்த வேதம் ஓதியவர்களைச் சந்தோகர், ஔத்காதா என அழைப்பார்கள். கடைசியாக வருவது அதர்வ வேதமாகும. இதனை "அதர்வாங்கிரஸ்" எனவும் கூறுவதுணடு. இந்த வேதத்திற்கு முக்கியமான மகிரிஷிகள் அதர்வர் அங்கிரஸ் என இருவர். அத ஞல் இந்தப் பெயரும் ஏற்பட்டது. இந்த வேதத்

தில் 20 காண்டங்களும், 59876 மந்திரங்களும் உள்ளடங்கும். இந்த வேதத்தை வைதிகர்கள் அதிகம் ஆதரிப்பதில்லை. முதல் மூன்று வேதங்களில் மக்கள் கடமை, சடங்குகள், வேள்வி, மறுமை இன்பம் என்பன போன்ற விஷயங்கள் உள்ளன. இந்தக் கடன்கள பெரும்பாலும் நாட்டின் நலனுக்காகவே உள்ளவை. இவைகளைச் செய்து அந்தணர்கள் மக்கள் நலனைப் பேணுகிறார்கள். இன்றளவு நாட்டில் நடக்கும மிகப் பெரிய அழிவுகளுக்குக் காரணம் வேத நெறியை நாம விட்டதே ஆகும். இவ் வேதங்கள் வெற்று மந்திரங்கள், வைதிகச் சடங்குகளுக்கு வேண்டிய மந்திரங்கள் கொணடவை என நினைப்பதுமுற்றிலும் தவறு.விஞ்ஞானக் கண்கொணடு வேதங்களை ஆராய்ந்தால் பலபல இன்றளவு வெளிவராத பல நாட்டுக்குத் தேவையான விஞ்ஞான நுணுக்கங்களைக் காணலாம். அயல் நாட்டினர் இந்த விஞ்ஞான நோக்குடன் வேதங்களை அணுகி ஆராய்ந்து கண்டு பிடித்த விக்ஞானங்கள் பல. நாம் நம் ஞானச் செல்வத்தைப் பிறருக்கு விட்டுவிட்டு அவர்கள் அதனை வெளியிடும் பொழுது பட்டிக்காட்டான் யானையைப் பார்த்தது போல் நாம் வியக்கிறோம். இது பரிதாபத்துகுரியது. உதாரணமாக ஒரு ருக் வேதமந்திரம் - துக்ரஹா் என்ற ராஜரிஷி, அயல் நாட்டின் மேல் படை எடுக்கத் தன் பேரனை புஜ்யு என்பவரை ஆகாய விமானப்படையில் அனுப்பினார். மற்றும் நீரில் தரையில் செல்லும் பல போர்ச் சாதனங்களும் அவரிடம் இருந்தன எனவும் காட்டுகிறது. இந்த விமானத்திற்கு இரண்டு ஹார்ஸ்பவர் மிஷின் இருந்தது எனவும் இந்த மந்திரம் குறிப்பிட்டது. வேதங்களில் சம்ஹிதை நூல்களில் இவ்வளவு அருமையான செய்திகளும் கருத்துக்களும் இருப்பினும் நாம் இத்தகைய கருத்துக்களைக் காணுமலும், ஆராயமலும் செயல் படுத்தாமலும் இருக்கிறோம். இந்த வேதங்களின் முடிப்பகுதியில் உள்ள உபநிஷதங்கள் 108 உண்டு. அவைகளில் ஈசாவாஸ்யம், கேனம், கடம், பிரச்சினம், முண்டகம், மாணடுக்யம், தைததரீயம், ஐதமாயம், சாந்தோக்கியம், பிரகதாரணயம் என்ற 10 உபநிஷதங்கள் முக்கியம். இவற்றை நன்கு படித்து, உணர்ந்து செயல்படுத்துகிறவர்களைக் கடவுளின் அருகில் இவை கொண்டு சேர்க்கும்.

(தொடரும)

(26-ம் பக்கத் தொடர்ச்சி)

**2. ஸங்கர்ஷணம் :-** இந்த ஸாளக்ராம மூர்த்தி சிவப்பு நிறமுள்ளதாயும் உள்ளே இரண்டு சக்கரங்களும் கீழ் பாகத்தில் தாமரைப்பூ அடையாளத்துடன் இருக்கும்.

**3. ப்ரத்யுமனம :-** இந்த ஸ்ரீமூர்த்தி மஞ்சள் நிறத்துடனும் இருக்கும். அது நீளமானதும, அதன் மேல் சிறு பொட்டுக்களான துவாரங்களுமிருக்கும்.

**4. நாராயண :-** இந்த ஸ்ரீ மூர்த்தியான கருமை நிறம் உள்ளது. துவாரத்தினுள்ளே கதை மாதிரியான அடையாள வரிகளும், நாபியில் வட்ட அடையாளமும் சற்று உயர்ந்தும் இருக்கும்.

**5. க்ருஷ்ணன் :-** இந்த ஸ்ரீமூர்த்தியானது, உருணடையாகவும் பின் பக்கம் அமுங்கினதாயும் இருக்கும்.

**6. வாமனன:-** இந்த ஸ்ரீ மூர்த்தியானது சிறிய உருண்டையாகவும் குட்டையாகவும் இருக்கும்.

**7. ஹயக்ரிவமூர்த்தி :-**

(*a*) அங்குச வடிவமாகவும், நாவல் பழத்தின் நிறத்துடன் இருக்கும்.

(*b*) அங்குச வடிவமான முகத்துடனும், நீளமான பிந்துககள் உள்ளதும், பழுத்த நாவல்பழம் போன்ற வடிவம உள்ளதுமாகும.

**8. திரிவிக்கிரமன் :-** இந்த ஸ்ரீமூர்த்தியானது இடது பாகத்தில் ஒரு சக்கரமும், வலது பாகத்தில் ஒரு கோடும் கறுத்த நீல வர்ணத்துடனும் இருக்கும்.

**9. ஹிரண்யகர்பம் :-** இந்த ஸ்ரீமூர்த்தியானது துவாரமில்லாது நீல வர்ணமாக, குளிர்ந்த மேனியுடன் இருககும்.

**10. ஸ்ரீலக்ஷ்மி ந்ருஸிமஹ ஸ்ரீமூர்த்திகளின வகைகள் (லக்ஷணங்கள்)**

(*a*) **நாரஸிமஹ மூர்த்தி :-** நீணட முகம், மஞ்சள், சிவப்பு நிறம், நீளமான சககரங்கள் பருத்த வயிருடையதாக இருக்கும்.

(*b*) **மஹா ஜ்வாலா ந்ருஸிம்ஹமூர்த்தி** பெரிய சிலையாகவும், விஸ்தார முகம, நீலம் அல்லது கபில நிறம் இப்படியாக இருப்பது.

(*c*) **ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிமஹ மூர்த்தி** துவாரத்தில் பெரியதான ஒரு சக்கரம். அதன் பக்மத்தில் மற்றொரு துவாரத்தில் சூக்ஷ்மமான சக்கரம் இப்படியாக இருப்பது கபில வர்ணத்துடன் இருக்கும்.

(*d*) **கபில நரஸிம்ஹ மூர்த்தி :** இரண்டு தெத்துப் பற்கள் அல்லது பெரிய சக்கர ரேகை, வனமாலையுடன் அழகாக இருககும்.

(*e*) **லக்ஷ்மீ ந்ருஸிமஹ மூர்த்தி :**
**(மற்றொரு வகை)**

கறுப்பு வர்ணத்தோடும், இடது பாகத்தில் இரண்டு வர்ணத்தோடும், புள்ளிகள் உள்ளதுமாக இருக்கும். பொதுவாகவே ஸ்ரீநருஸிம்ஹமூர்த்தி ஸாள க்ராமங்கள் எல்லாம் கபில அதாவது பழுப்பு நிறமாகத்தான் இருக்கும்.

(தொடரும்)

 

# பன்னிரண்டு

 

இந்த எண் நம்முடைய கவனத்திற்குரியது. அன்றாட வாழ்க்கையில் மறக்க முடியாத நாமங்களை, பகவந் நாமங்களைத்தான், நாம் ஒவ்வொருவரும் காலை, நடுப்பகல், மாலை வேளைகளில் சந்த்யாவந்த னத்தில் உச்சரிக்கிறோம். தினம் காலையில் ஸ்நானம் செய்து (தீர்த்தமாடி) மடிவேஷ்டி அணிந்து திருமண் காப்பு சாத்திக்கொள்கிறோம். அவைகளைக் கீழ் கூறி யுள்ளபடி அந்தந்த நாமங்களுக்கு உரிய இடத்தில் தரித்துக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| ஓம் கேசவாய நம: | நெற்றி |
| ஓம் நாராயணாய நம: | வயிறு |
| ஓம் மாதவாய நம: | மார்பு |
| ஓம் கோவிந்தாய நம: | உட்கழுத்து |
| ஓம் விஷ்ணுவே நம: | வலது வயிறு |
| ஓம் மதுசூதனாய நம: | வலது புஜம் |
| ஓம் த்ரிவிக்ரமாய நம: | வலது கழுத்து |
| ஓம் வாமனாய நம: | இடது வயிறு |
| ஓம் ஸ்ரீதராய நம: | இடது புஜம் |
| ஓம் ஹ்ருஷீகேசாய நம: | இடது கழுத்து |
| ஓம் பத்மநாபாய நம: | பின் முதுகு |
| ஓம் தாமோதராய நம: | பின் கழுத்து |

இவையெல்லாம் திருமண் இட்டுக்கொள்ளும் 12 நாமங்கள். அதேபோல் ஸ்ரீசூர்ணம். இதற்கு நடு வில் சாத்திக்கொள்ளவேண்டும். ஒவ்வொரு கீழ் கண்ட நாமாவைச் சொல்லி மேலே சொல்லியபடி முறையே அணிய வேண்டும்.

ஓம் ச்ரியை நம:
ஓம் அம்ருதோத்பவாயை நம:
ஓம் கமலாயை நம:
ஓம் சந்த்ரஸோதர்யை நம:
ஓம் விஷ்ணு பத்ந்யை நம:
ஓம் வைஷ்ணவ்யை நம:
ஓம் வராரோஹாயை நம:
ஓம் ஹரிவல்லபாயை நம:
ஓம் சார்ங்கிண்யை நம:
ஓம் தேவதேவிகாயை நம:
ஓம் ஸுரஸுந்தர்யை நம:
ஓம் மஹாலக்ஷ்ம்யை நம:

அடுத்தபடி ஆசமனம் செய்து நம் தேகத்தில் 12-பாகங்களில் கேசவாய நம: என்று ஆரம்பித்து தாமோதராய நம: வரையில் விரல்களினாலும் கட்டைவிரலாலும் சேர்த்துத் தொடுகிறோம். இதன் அர்த்தம் என்னவென்றால் 12 மாதங்களுக்கு (தமிழ் ஆனாலும் சரி, ஆங்கிலமானாலும் சரி) உரிய தேவதை கள் நம்மைக் காப்பாற்றுவதாகப் பிராத்தனை செய் வதைக் குறிக்கும். அவையாவன:-

சித்திரை — விஷ்ணு
வைகாசி — மதுசூதனன்
ஆனி — த்ரிவிக்ரமன்
ஆடி — வாமனன்
ஆவணி — ஸ்ரீதரன்
புரட்டாசி — ஹ்ருஷீகேசன்
ஐப்பசி — பத்மநாபன்
கார்த்திகை — தாமோதரன்
மார்கழி — கேசவன்
தை — நாராயணன்
மாசி — மாதவன்
பங்குனி — கோவிந்தன்

கேசவன் என்னும் நாமம் மார்கழி மாதத்தில் தான் ஆரம்பம். இது ஸ்ரீமத் பகவத்கீதையில், பக வான் மார்கழி மாதத்தில் வசிக்கிறார் என்பதைக் கொண்டே குறிப்பிடப்பட்டிருக்கிறது. நம் உறுப்பு களில் இது வலது கன்னம் தொடும்போது சொல்ல வேண்டிய மந்திரம். கடைசியில் தாமோதரன் என்ற நாமம் தலையின் உச்சியில் தொட்டுச் சொல்ல வேண்டியதாகும். யதீந்திரர்களுக்கு சூக்ஷ்மசரீ ரம் அவர்களை விட்டுச் செல்லும்போது தலை உச்சி யிலிருந்து செல்வதையும் இது குறிக்கும்.

நம் சம்பிரதாயத்தில் பகவானை விட ஆழ்வார் ஆசார்யர்கள் மூலம் சரணாகதி அடைவதே மிக மேலானதாகச் சொல்லப்பட்டுள்ளது. இதற்கு பரந் யாஸம் பெறுதல் என்றும் கூறுவார்கள். ஆகையால் இந்த மாதங்களில் ஆசார்ய புருஷர்கள் அவதரித்தி ருப்பதையும் சற்று நோக்கலாம்.

சித்திரை - மதுரகவி, உய்யக்கொண்டார், ஸ்ரீ ராமாநுஜர், கிடாம்பி ஆச்சான், நடாதூர் அம்மாள், கிடாம்பி அப்புள்ளார்.

வைகாசி:- நம்மாழ்வார், திருக்கோட்டியூர் நம்பிகள், பராசரபட்டர்.

திரு. அ. சேஷாத்ரி, பி. ஈ., மதுரை.

ஆனி :- பெரியாழ்வார், ஸ்ரீமந்நாதமுனிகள்.

ஆடி :- ஸ்ரீ ஆண்டாள், ஆளவந்தார்.

ஆவணி :- ஸ்ரீநயனாசார்யர், கடிகாசலம் அம்மாள், பெரியவாச்சான் பிள்ளை.

புரட்டாசி ;- ஸ்ரீதேசிகன், ப்ரும்மதந்த்ர ஸ்வதந்த்ரர், ஸ்ரீ ஆதிவண் சடகோப யதீந்திர மஹாதேசிகன்.

ஐப்பசி :- பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், விஷ்வக்சேனர், திருக்குருகைப் பிரான் பிள்ளான்.

கார்த்திகை ;. திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார், நம்பிள்ளை.

மார்கழி :- தொண்டரடிப்பொடியாழ்வார், பெரிய நம்பி.

தை :- திருமழிசைப்பிரான், குருகைக் காவலப்பன், கூரத்தாழ்வான், எம்பார்.

மாசி :- குலசேகரர், மணக்கால் நம்பி, திருக்கச்சி நம்பி.

பங்குனி :- பெரிய பிராட்டி.

இந்த மாதங்களில் அவதரித்த ஆழ்வார்களைச் சேவித்த பயனும் கிடைக்கப் பெற்றதாகும். ஆரம்பத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணுவில் சேவித்து, கடைசியில் பெரிய பிராட்டியில் முடிவதையும் கவனிக்கவும். இந்நாமாக்களைச் சொன்னால் பயனுண்டா என்ற சந்தேகம் எழுவது இயல்பே. இதற்கு அஜாமிளன் சரித்ரம் பிரசித்தம். நினைத்தாலே பயனுண்டு என்று பகவான் இக்கலியில் ஸ்ரீ நாராயணீயம் எழுதிய நம்பூதிரிக்கு வாக்களித்துள்ளார். இதை 26-ஆவது தசகம், 10-ஆம் ச்லோகம் கஜேந்திர மோக்ஷ சரிதத்தில் காணலாம். இதுவே ஸ்ரீமத் பாகவதத்திலும் கூறப்படுகிறது பகவான் வாயிலாகவே.

காயத்ரி மந்த்ரம் 24 அக்ஷரங்களைக் கொண்டது. இதை வைத்தே 24,000 ச்லோகங்கள் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்திலுள்ளன. இவையெல்லாம் பன்னிரண்டின் பாகங்களேயாவன. அதேபோல் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ர நாமங்களும் 12-ஆல் மிச்சமில்லாமல் வகுத்தறியலாம்.

இன்னுமொரு விசேஷத்தையும் பார்க்கலாம். நமக்கெல்லாம் வேதமெனச் சொல்லப்படுபவை ஸ்ரீமத் பகவத் கீதையும், வேதங்களின் சாராம்சமான ஆண்டாள் திருப்பாவையும். இவைகளில் 12 ஆம் அத்தியாயம் 12-ஆம் பாட்டு எடுத்து பார்ப்போம். 12-ஆம் அத்தியாயம், பக்தியோகம் என்பது. பகவானை பக்தியினால எப்படி அடையலாமென்பது முக்யமான பகுதியல்லவா? 12 ஆம் பாட்டு "கனைத்திளங் கற்றெருமை". இந்தப் பாட்டின் உள் அர்த்தம், ஆசார்யர்கள் பகவத்விஷயங்களைப் பால் மாதிரி தன்னை வந்து சேருபவர்க்குப் பொழியக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்பதைக் குறிக்கிறது. கடைசியாக நாம் தினமும் தினத்தாள்களில் நம் ராசிபலன் பார்க்கிறோம். அது பலிதமாகிறதா, இல்லையா என்பது தனி விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள வேண்டிய விஷயம். அவைகளின் எண்ணிக்கையும் 12.

இவைகளினால் இந்த எண் 12 எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததென்பதை அறிகிறோம். ★

# தி. தி. தேவஸ்தான விருந்தினர் விடுதி, புது தில்லி.

## வாடகைக் கட்டண விவரங்கள்.

| விருந்தினர்கள | குளிர்ச் சாதனம் இல்லாதது சிறியது ரூ. | குளிர்ச் சாதனம் இல்லாதது பெரியது ரூ. | குளிர்ச் சாதனம் உள்ளது. சிறியது ரூ. | குளிர்ச் சாதனம் உள்ளது. பெரியது ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1) முன்னாள் அறநிலையத்துறை அமைச்சர்கள, மேலாண்மைக்குழு உறுப்பினர்கள், அலுவலர்கள். | 10/- | 15/- | 15/- | 25/- | சலுகைக் கட்டணங்கள் |
| 2) அறநிலையத்துறை அமைச்சர்கள், தி.தி.தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள், தி. தி. தே. அலுவலர்கள். | 10/- | 15/- | 15/- | 25/- | சலுகைக் கட்டணங்கள் |
| 3) மேற்குறிப்பிட்ட 1, 2 வரிசையில் இடம் பெருத மற்றைய விருந்தினர்கள். | 15/- | 25/- | 25/- | 50/- | சாதாரண வாடகைக் கட்டணங்கள் |

# ஆனந்த விமான நிலயம்

वेदेष काण्डद्वितयं मदीयमाराधने बोधयतीति सद्भिः।
विचार्य निर्धारितमागमेषु तं श्रीनिवासं प्रणमाम्यजस्रम् ।।

விமானம் என்கிற பதத்திற்கு அநேக பொருள்கள் இருந்தாலும் உலகில் ஆலயத்தில் பெருமாள் எழுந்தருளியிருக்கும் கர்ப்பக்ருஹத்திற்கு மேல் கோபுரம் போன்ற கட்டடத்திற்கு இந்தப்பதம் அதிகமாய் வழங்கப்படுகிறது. உபநிஷத்து முதலிய இடங்களில் இப்பதம் யோக வ்யுத்பத்தியைக்கொண்டு (பிரித்துப் பொருள் கூறுவது) பர ப்ரஹ்மத்தைக் குறிப்பதற்கு வழங்கப்பட்டுள்ளது. மானம் என்ருல் அளவு என்று பொருள். அது இல்லாதது 'விமானம்', அளவில்லாதது இதுபரமாத்ம ஸ்வரூபமேயாம். பூமியில் போகும் ரதம், சில குறிப்பிட்ட இடங்களிலேயே போக முடியும். ஆகாய விமானம் அப்படியில்லாமல் அளவில்லாமல் எங்கும் ஸஞ்சரிக்குமாதலால் அதற்கு விமானமென்று பெயர் வந்தது. அப்படி ஆகாயத்தில் போகக்கூடிய விமானங்களே, கோயிலில் உள்ள விமானங்களும். அதாவது—பெருமாள் எழுந்தருளியிருக்கும் கர்ப்ப கிருஹத்திற்கு மேலுள்ள, தேரின் மேல்பாகம் போன்ற கட்டடத்திற்கு இப்பதம் உலகத்தாரால் வழங்கப்படுவதாயினும், பெருமாள் எழுந்தருளியிருக்கும் கர்ப்பகிருஹம் முதற்கொணடு நுனி பாகம் வரையில் தேர் போன்ற பூர்ண கட்டடத்திற்குமே விமானம் என்று பெயர். இந்த விமானம் பகவானுடைய ஸங்கல்பத்தை யநுஸரித்து ஆகாயத்தில் எங்கேயும போகக் கூடியதாயினும் இங்கு எல்லோருக்கும் ஸேவை ஸாதிப்பதின் பொருட்டு ஸ்திரமாய் இருக்கிறது. இப்படிப்பட்ட ஆகாய விமானங்கள் ஒவ்வொரு க்ஷேத்திரத்திலும் உள்ளன. காஞ்சீ புரத்தில் உள்ள விமானத்திற்குப் புண்யகோடி விமானமென்று பெயர். (அவ் விமான நிழலின் ஸமீபத்தில்) எந்த புண்யகர்மங்கள் செய்தாலும் அது கோடிமடங்காய் அதிகரித்து, பலனையளிக்குமென்பதால் அதற்கு அப்பெயர் காரணப் பெயர் ஆகும்: இப்படியே ஸ்ரீரங்கத்திலுள்ள விமானத்திற்கும் ப்ரணவாகார விமானமென்று பெயர். ஓம்காரமெனப்படும் ப்ரணவம்போல் அவ்விமானம் அமைந்துள்ளது. அதாவது, ப்ரணவம் ப்ரப்ரஹ்ம ஸ்வரூபத்தை நன்கு காட்டிக் கொடுப்பதுபோல் இவ்விமானமும் பகவானுடைய ஸ்வரூபத்தை (தன்னுள் இருப்பதை) நன்கு காட்டிக்கொடுக்கிறது. இதன்றி க்ரந்தாக்ஷரத்தில் ஒ என்கிற அக்ஷரத்தின் வடிவு எம்மாதிரியுள்ளதோ அவ்வடிவமே அங்குள்ள விமானத்திற்குமுள்ளது. இவ்வாறே நம் வேங்கடமலையில் ஸ்ரீநிவாஸன் எழுந்தருளியிருக்கும் விமானத்திற்கு 'ஆனந்த நிலய விமான'மென்று பெயர். 'உயர்வற உயர்நலமுடையவன் யவனவன்' என்று திருவாய் மொழி முதலில் ஆழ்வார் கூறியபடி உயர்ந்த ஆனந்தத்தையுடைத்தாயிருப்பதாலும், பகவானுடைய திவ்யாத்ம ஸ்வரூபமே ஆனந்த ரூபமாயிருப்பதாலும் பகவானை ஆனந்தன் என்று உபநிஷத்துக்கள் பேசுகின்றன: தான் ஆனந்தரூபனுயிருப்பதோடு தன் ஸம்பந்தம் ஏற்பட்டவர்களையும் ஆனந்தமடையும்படி செய்கிருன். "कोह्येवान्यात् कः प्राप्यात् यदेष आकाश: आनन्दो न स्यात् एषह्येवानन्दयति"। என்று தைத்திரீயோபநிஷத்து பேசுகிறது. பகவானுடைய உயர்ந்த குணங்களை முன்னிட்டு வந்துள்ள விஷ்ணுவின் ஸஹஸ்ரநாமங்களில் ஆனந்த: என்கிற ஒரு திருநாமம் (529) உண்டு. 'आनन्दवल्लीमीमांस्यमान वाङ्मनसागोचर महानन्दोऽस्यास्तीति आनन्दः' என்று பட்டரின் பாஷ்யம். ஆகையால் ஆனந்தனென்ருல் பகவானுக்குப் பெயர். அவன் ஸ்திரவாஸம் பண்ணும் இவ்விமானத்திற்கு ஆனந்த நிலய விமானமென்று பெயர் வந்தது. ஆனுல் எல்லாக் கோயிலில் எழுந்தருளியிருக்கும் பகவானும் ஆனந்தனே யாதலால் அங்கங்குள்ள விமானங்களும் ஆனந்தநிலயமே யாதலால் இதற்கு மாத்திரம் இப்பெயர் அஸாதாரணமாய் வழங்கப்படுவானேன் என்று கேள்வி பிறக்கலாம். இதற்கு ஸமாதானம்—தன்னை அண்டின ப்ரஜைகளுக்கு அவரவர்கள் கோரிய பயன்களை

திரு. கே. சடகோபாசாரியார்

இம்மையிலும் மறுமையிலும் வழங்கி அவர்களை யானந்தமடையச் செய்து தானும் மஹாநந்த ரூப னென்பதை அவர்களுக்கு ஒரு க்ஷணமாத்திர ஸேவையாலும் வெளிப்படுத்தி உலகில் எங்கும் கண்டிராத ஓர் உயர்ந்த போக்கு இம்மலையிலுள்ள பெருமாளிடத்தில் நாமனுபவித்து வருவதால் இம் மூர்த்தியே ஆனந்தனென்கிற பதத்திற்கு முக்யப் பொருளாகக் கூடுமாதலால் யோகரூடி என்கிற வ்யுத்பத்தியால் இவ்விமானமே ஆனந்த நிலைய விமானம். ஆனந்தக்கடலான பகவானிடமிருந்து சில ஆனந்தத் திவலைகளையோ அல்லது அவனுடைய ஆனந்தத்தைப் போன்ற ப்ரஹ்மானந்தத்தையோ விரும்பும் பக்தர்கள் (ஐச்வர்யம் முதலாக மோக்ஷ பர்யந்தமான புருஷார்த்தங்களால் கிடைக்கும் ஆனந்தத்தை விரும்பும் பக்தர்கள்) கருணைமூர்த்தி யான அவனுடைய தயையினாலேயே அவற்றை அடைய வேண்டும். அவன் தயவின்றி ஒன்றும் நடக் காது. ஆக எந்த புருஷார்த்தமும் பகவத் தயையாலே பெற வேண்டும். இப்படிப்பட்ட தயை எல்லாத் திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் பகவான்களுக்கும் உள்ளதாயினும் இக்கலியுகத்தில் இவ்வேங்கட மலை யிலெழுந்தருளியிருக்கும் பகவானுக்கே இத்தயை பொங்கி நிற்கிறது. ஆதலாலேயே ப்ரத்யக்ஷமாய் கோடிக்கணக்கான ஜனங்கள் தினமும் வந்து தொழுது தாம்தாம் கோரிய பயன்களையடைகிறார் கள். இப்படியே மோக்ஷத்தையும் இவனுடைய அருள் தரக்கூடியது என்று கண்ட ஸ்ரீ தேசிகன் இப் பெருமாளுக்குடைய தயைக்கே ஒரு நூறு சுலோகங் களிட்டு 'தயா சதகம்' பாடினார். தானும் கடைசி யில்,

> " मातर्दये मयि कुरुष्व तथा प्रसादं
> बद्धादरो वृषगिरिप्रणयी यथाऽसौ ।
> मुक्तानुभूतिमिह दास्यति मे मुकुन्दः ।। "

என்று தனக்கு மோக்ஷானந்தத்தை இம் மலையி லேயே அளிக்குமாறு ப்ரார்த்தித்தார். ஆதலால் தான் மஹாநந்தரூபி என்பதைத் தன்னை யாச்ரயித்த ஜனங்களுக்கு அவ்வாநந்தத்தைக் கொஞ்சமாகிலும் கொடுத்தே நிரூபிக்க வேண்டியிருப்பதால் அவ்வா நந்தம், அவர்களுக்குப் பகவானின் அருளாலேயே ஏற் பட வேண்டியிருப்பதால் அவ்வருள இந்த பகவா னுக்கே விஞ்சியிருப்பதால் ஸ்ரீநம்மாழ்வார், ஸ்ரீதேசி கன் முதலிய மஹான்கள் இப்பெருமானிடமே ப்ர பத்தி செய்தார்களாதலால் இப்பகவானுக்கே 'ஆனந்தன்' (தானும் ஆனந்த ரூபியாகிப் பக்தர்களை யும் ஆனந்திப்பவன்) என்கிற ஔபநிஷதமான பதம் பூர்ணமாய் பொருந்துகிறது. ஆனந்தம் என்பதால் பெருமாளைச் சொல்லி அவனுக்கு நிலயம், இருப்பி டம், விமானம்.

விமானமென்கிற பதமே (அளவில்லாதவன்) பகவானைச் சொல்லும். மரீசி மஹரிஷி அருளிய விமா னார்ச்சன கல்பம் என்கிற வைகானஸ ஸம்ஹிதை யில் முதலில் ஆரம்பிக்கும்போது– "तस्मात्—परं ब्रह्म......सर्वभूतात्मकं सर्वाधारं....परमपुरुषमर्चयेत् तत विमानार्चनम् என்கிற வாக்யத்தில் विमानार्चन என்றால் பரமபுருஷனின் ஆராதனம் என்றே பேசுகிறார். ஆதலால் ஆனந்தத்திற்கு ஆச்ரயமான அளவில்லாத பரமாத்ம ஸ்வரூபத்தையே ஆனந்தநிலைய விமான மென்று சொல்லலாம். அப்படிப்பட்ட விமானரூபி யான பகவான் எழுந்தருளியிருப்பதால் அக்கட்டடத்திற்கும் ஆனந்த நிலைய விமான மென்று பெயர் வந்ததாகக் கொள்ள வேணும். பகவானுடைய கலைகளில் ஒருகலை விமா னத்திலும் இருப்பதாக ஆகம சாஸ்திரங்கள் பேசுவ தால் விமானமும் பகவத் ரூபமே. மேலும் பெரி யோர்கள் ஆலயத்திற்குச் செல்லும்போது விமா னத்தை ஸேவிக்காமல் திரும்பமாட்டார்கள். விமான நிழலைக் காலால் மிதிக்கமாட்டார்கள். இவையெல்லாம் அவ்விமானமே பகவத் ஸ்வரூப மென்பதற்கு நிதர்சனம்.

அப்படிப்பட்ட இவ் வானந்தநிலைய விமானம் இத்திருமலையில் பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்பே அத்ரி முதலிய பரம ரிஷிகளுக்கு அவர் களின் தபசுக் கிணங்கிய பகவானின் ஸங்கல்பத்தால் ஸேவை ஸாதித்திருப்பதாய் வேங்கடாசல மஹாத் மிய புராணம் கூறுகிறது. பகவானில்லாமலும்கூட சில சமயம் விமானம மாத்திரம் காக்ஷியளித்ததாகக் கூடப் புராணத்திலுள்ளது. பிறகு அவர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி பகவானே ஸ்திரமாய் அதை ஸேவை ஸாதிக்கும்படி நிறுத்தியுள்ளான். நம்போனறவர்கள கணணுக்கு, கல் சுண்ணாம்புகளி னால் கட்டினதுபோல் தோன்றினாலும் இவ்விமானம் வெகுகாலததிற்கு முன் ஆவிர்பவித்த அப்ராக்ருத விமானமே என்று கொள்ள வேணடும்.

> " श्रीवेङ्कटाद्रिनिलयः कमलाकामुकः पुमान् ।
> अभङ्गुरविभूतिर्नस्तरङ्गयतु मङ्गलम् ।। "

★

# ★ கீதை காட்டும் நல்வழி ★

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

## புருஷோத்தம யோகம்

**அத்தியாயம்—15.**

**பகுதி—7.**

பெரிய விழாக்களில 'பொம்மலாட்டம்' என்ற ஒரு அம்சம் இடம் பெறும பெரிய அளவில் செய்யப்பட்ட பொமமைகளுக்குள் மனிதர்கள புகுநதுகொணடு ஆடுவர். அதைப் பார்ககின்ற குழந்தைகள் வெறும் பொமமைகள்தான் உயிர் பெறறு ஆடுவதாக எண்ணி, கைகொட்டிச் சிரித்து வியப்போடு பார்க்கும. ஆனால் உணமை உணர்ந்த பெரியவர்கள் 'ஆடுவது பொம்மை அல்ல, அதை ஆட்டுவது உள்ளே உள்ள நபா' என்பதை அறிவர். இதைப போலவே 'பொய்க் கால் குதிரை' ஆட்டத்திலும் குதிரை அமைப்பில உள்ள பொம் மைக்குள் புகுந்து மனிதன் ஆடுகையில் அக்குதிரை அஙகுமிங்கும் ஓடுவதைப் போலவே தோன்றும். இதைப்போல நமது உடல்கள் பொம்மைகளுககு நிகர். அவற்றை உள்ளிருந்து இயக்குவது ஆன்மா. அறிவிலிகளுக்கு இநத உணமை தெரியாது. அவர்கள் 'விமூடர்கள்'. வெறும் ஊனக் கண மட்டுமே வாய்க்கப்பெற்றவாகள். ஆனால் ஞானக் கண் வாய்க்கப் பெற்றவர்களுக்கு உடல் என்னும் பொம்மைக்குள இருக்கும் ஆன்மா வேறு என்பது தெரியும. உடல்கள் கோடி கோடி. ஆனால் ஆன்மாவோ ஒன்று உடல்களுக்குத் தோற்றமும், அறிவும் உணடு; ஆன்மாவுக்கு அவை கிடையாது.

மனிதர்கள் 'தலையணையைப் போன்றவர்கள்; அவற்றில் ஒன்று சிவப்பாயும், மற்றொன்று நீலமாயும், வேறொன்று கருப்பாய் இருந்தபோதிலும் அவற்றுக்குள்ளிருக்கும பஞ்சு ஒன்றே அது போலவே ஒருவன் பார்வைககு அழகாயிருக்கிறான். மற்றொருவன் கெட்டவனாக இருக்கிறான எனறாலும் ஈசுவரன் அவர்கள எல்லாருள்ளும் வாசம் செய்கிறான்', என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் இநதக் கருத்தை விளக்குகிறார்.

ஜீவனின் உணமை இயல்பை ஞானக் கணணுடையவர் மட்டுமே காண முடியும் என்றால் அந்த ஞானக் கண்ணைப் பெறுவது எங்ஙனம் என்பதன் விளக்கம் அடுத்த ஸ்லோகத்தில் வருகிறது.

'யதந்தோ யோகின ஸசைனம
பச்யந்தயாத்மன் யவஸ்திதம் ।
யதந்தோ ப்யக்ருதாத் மானோ
நைனம் பசயந்த்ய சேதஸ: ।'

'முயற்சியுடைய யோகிகள் அவ் வாத்மனைத் தங்களுக்குள்ளேயே காணகின்றனர். முயற்சியுடையார் எனினும் ஆத்மபரிபாகமடையாத அறிவிலிகள் அவனைக் காண்பதில்லை'

முயற்சி இன்றி நாம எந்தக் காரியத்தையும் சாதிக்க இயலாது. இதை நாம் நன்கு மனதில் பதிய வைத்துக் கொள்ள வேணடும். ஒரு சமஸ்கிருத சுலோகம், முயற்சியின் பெருமையை அழகாக விளக்குகிறது.

उद्यमेन हि सिध्यन्ति कार्याणि न मनोरथैः ।
न हि सुप्तस्य सिंहस्य प्रविशन्ति मुखे मृगाः ॥

உத்யமேன ஹி ஸித்யந்தி கார்யாணி
ந மனோரதை: ।
ந ஹி ஸுப்தஸ்ய ஸிம்ஹஸ்ய பிரவி-
சந்தி முகே ம்ருகா: ॥

'முயற்சியினாலேயே காரியங்கள் யாவும் நிறைவேறுகின்றன. வெறும் ஆசைகளால் மட்டுமல்ல; தூங்கும் சிங்கத்தின் வாயில் தாமாகப் போய் மிருகங்கள் விழுவதில்லை அல்லவா', என்பது இதன் பொருள். இதைத்தான் வள்ளுவரும் 'முயற்சி திருவினையாக்கும்' என்றும், கீதையின கடைசி சுலோகத்தில 'எங்கே யோகேசுவரனான கிருஷ்ணனும் (திருவருளும) வில் ஏந்திய அர்ஜுனனும் (முயற்சியும்) ஒன்றுபடுகின்றனரோ அங்கே ஐச்வர்யம் வெற்றி அனைத்தும் கைகூடும்' என்று பகவானும் வலியுறுத்துகின்றார்.

'யதந்தோ யோகின:'—முயற்சியுடைய யோகிகள் என்னும் வார்த்தை யோகிகளும் முயனறால் தான் பெருநிலையை அடைய முடியும் என்பதை வலியுறுத்துகிறது. 'சாமியார்கள் என்றால் சோம்பேறிகள், உண்டு உறங்குபவர்கள்' என்று நம்மில் சிலர் கொணடு விளங்கும் கருத்து தவறானது என்பது இதனால் எடுதது்க்காட்டப்படுகிறது. யோகிக்கும், அறிவிலிக்கும் முயற்சி என்பது பொதுவானது. ஆனால் மன பரிபாகமில்லாத அறிவிலி வெறும் மாடு போல உழைக்கிறான். செக்கு மாட்டிற்கும அவனுக்கும் உருவத்தில் மட்டுமதான் வேறுபாடு. யோகியோவெனில் தனது வாழ்நாளை வீணாக்காது யோகததில நிலை நின்று மனபரிபாகததினால் ஆத்ம சாதனையில் முன்னேறி பெருநிலையை அடைகிறான்.

விலைமதிப்பற்ற வைரக்கல் கையிலிருந்தும் அதை வெறும் கல் என்று எண்ணித் தூர எறியும் மூடனைப் போல பெறற்கரிய இந்த மனிதப் பிறவியைப் பெற்றும அதை உண்டு உறங்கிக் கூடிக் குலவியே வீணாக்குபவன் பெரிய அறிவிலியாகிறான்.

மாருக அதன் பெருமையை உணர்ந்து விநாடிப் பொழுதையும் வீணாக்காது இறைவழிபாடு மற்றும் சமுதாயத் தொண்டில் ஈடுபடுத்து பவன சிறந்த அறிவாளியாகிறான்.

நீருக்குள் அமிழ்த்தப்பட்டவ னுக்கு மூச்சு விடுவதற்கு எவ்வளவு நாட்டம் இருக்குமோ, பல நாள் உணவின்றித் தவிக்கும் ஒருவனுக்கு உணவில் எவ்வளவு நாட்டம் இருக்குமோ அத்தகைய நாட்டம் ஒருவ னுக்கு ஆன்மானுபவத்தைப் பெறு வதில் இருக்க வேண்டும்.

இதைக் கீழ்ககாணும் ஒரு அரிய சம்ஸ்கிருத சுலோகம் விளக்குகிறது.

"அஜாத பக்ஷா இவ மாதரம் க்கா.
ஸ்தன்யம் யதா வதஸ தரா:
க்ஷுதாாதா: ।
பரியம ப்ரியேவ வயுஷிதம் விஷண்ணு
மனோ அரவிந்தாக்ஷ திதிருக்ஷதே
த்வாம் ‖"

'இறக்கை முளைக்காத இளம் பற வைகள் இரை தேடிக் காட்டிற்குள் சென்றிருககும் தஙகளது தாய்ப் பற வையை எவ்வளவு ஆர்வத்துடன் எதிர்பார்த்திருககுமோ, பசியால் வாடும் கன்றுகள் எவ்விதம தங்கள் தாய்ப் பசுவை ஆவலுடன் எதிா நோக்கி நிற்குமோ, பணம் தேடி வெளிநாடு சென்றுள்ள காதலனைக் காதலி எவ்வளவு நேசததுடன் எதிர் பார்த்து நிற்பாளோ அத்தகைய ஆாவத்துடன் இறைவா! உன்னைக் காண என் மனம் ஏங்கி நிற்கிறது' என்று மேறகாணும் சுலோகத்தில் பக்தர் ஒருவா பகர்கிறார்.

அத்தகைய யோகிகள ஆத்மனை எங்கே காணகிறனா? தஙகளுக் குள்ளேயே காணகின்றனர். ஆத்ம தத்துவததை வெளியே காண முடி யாது 'உடம்பினுக்குள்ளே உறு பொருள கண்டேன' என்று திரு மூலா கூறுவதற்கேற்ப உள்ளே உறையும் உறுபொருள ஆன்மாவா கும். ஆன்மா வேறு இறைவன் வேறு அலல. இரண்டும் ஒன்று தான். 'ஹிருதய கமல வாஸன்' என்பது இறைவனுககு உள்ள பல பெயர்களில் ஒனறு. இதயத்தில் உறையும் இறைவன் 'இந்த ஜீவன் என்னைப் பார்க்க மாட்டானா', என்று ஏஙகி நிற்க, அவனோ தன் பார்வையை உளமுகமாகத் திருப்பா மல், அதைப் புற உலகின் பக்கமே திருப்புகிறான்.

'யோகின:'—'யோகிகள் என்ற பன்மையில் உள்ள வார்த்தையா னது அஷ்டாங்க யோகி, கர்ம யோகி, பக்தி யோகி, ஞான யோகி, கிரியா யோகி, லய யோகி, குண்ட லினி யோகி போனற பல்வகை யோகிகளைக குறிககிறது

இததனை வகை யோகிகள் வெறு மனே முயன்றால் மடடும போதாது. 'யதநதோ அபி'—முயனறாலும கூட, 'அக்ருதாத்மான: அசேதஸ: ந ஏனம பச்யந்தி'—பணபடாத பாஙகுடைய அறிவிலிகள் இநத ஆத்மனைக் கணடு கொள்வதிலலை.

'நான் எத்தனை வருடம தொடர்ந்து பக்தி பண்ணுகிறேன் தியானம் செய்கிறேன். ஆனாலும் ஒரு முன்னேற்றத்தையும் காணோமே. மனம் அடங்கவே யில்லையே. அது என்னைப படாத பாடுபடுத்துகிறதே. ஒருவேளை மகான்கள் சொன்னதெல்லாம் பொய்யோ? என்ன யோகம்? என்ன தியானம்?', என்று சில சமயங்களில் நமது மனம் சோர்ந்துபோய உறு தியை இழக்கப்பார்ககும. நமக்கு ஏன் யோகத்தில் முன்னேற்றம வாய்ப்பதில்லை – என்பதற்கான காரணத்தைப் பகவான் இஙகே கூறு கிறார்.

மணிக்கணககாகப் புத்தகத்தைக கையில் வைத்துக்கொணடு விட டால் போதுமா? படிப்பது மனத தில் பதிய வேணடும். மன ஒரு மைப்பாட்டுடன் சிறிது படித்தாலே போதும்.

நாள் முழுவதும் நதியிலிருந்து பாத்திரத்தில் நீர் மொண்டு வீட்டி லுள்ள தொட்டியை நிரப்ப முயன்று லும் தொட்டி நிரம்பவேயில்லை. காரணம்? பாத்திரத்தில் ஓட்டை.

அதுபோல வருடக்கணக்காகப் பயிற்சியில் ஈடுபட்டாலும் மனம் தூய்மையடையாத நிலையில் சாதனை யில் இமமியளவு முன்னேற்றமும் ஏற்பட வழியிலலை.

(36-ம பக்கம பார்க்க)

## தீர்க்க சுமங்கலியாக வாழ!

எடையூர் சிவமதி.

சாவித்திரி தன் கணவன் தீர்க்காயுள் பெறுவதற்குத் தின சரி பிரார்த்தனை செய்து கொள்ளும போது கூறிய சுலோகம் இது. இதைத் தினசரி சுமஙகலிகள் சொலலி வநதால கணவ னுககு நீடித்த ஆயுள கிடைக்கும.

ஓமகார பூர்விகே தேவி
வீணா புஸதத தாரிணீ
வேத மாதர் நமஸ்துப்யம
அவைதவயம் ப்ரயசசமே
பதிவ்ரதே மஹாபாகே
பர்துஸ்ய பிரியவாதினி
அவைதவ்யமச ஸௌ பாக்யம்
தேஹித்வம மம ஸுவ்ருதே
புத்ரான் பௌத்ராமஸச ஸௌகயம்ச
ஸௌமஙகலயம ச தேஹிமே.

(16-ம் பக்கத் தொடர்ச்சி)

'' ஆடு கொடிப்படை சாடி யறத்தவ
ரேயாள
வேடு கொடுத்தது பாரெனும் இப
புகழ மேவீரோ
நாடு கொடுத்த எனநாயக னுக்கிவா
நாமாளும
காடு கொடுக்கி லராகி யெடுத்தது
காணீரோ''

குகன் வீரமுடையவன். எவருக்கும் அஞ்சாதவன். அவன் பகை வரைப் பார்த்து, தன் அன்பிற்கினிய நணபனைக் காப்பதற்காக, பகைவரிடம வீரவுரைகளைக் கூறுவது போல வும் சந்தம அமைத்துப் பாடினன் கமபன

**சூர்ப்பணகை :**

இராமனும், இலக்குவனும ஒரு குளிர்நத சோலையில் பன்னக சாலையை அமைத்தனர். அதில வாழ்ந்து வருங்கால், ஒரு நாள இராவணன தஙகையான சூர்ப் பணகை அஙகு வநதாள். அவள் இராமனைக் கணடு அவனுடைய அழ கில் மயங்கி அவன்மீது விருப்பம கொணடாள் சூர்ப்பணகை விகார வடிவத்தை உடையவள். இந்த வடி வத்துடன் சென்றால இராமன் தனனை விரும்பமாட்டான் என்று நினைத்து, தனக்குத் தெரிந்த மந்திரத்தைக கூறி அழகிய அன்ன நடை போல வும், மயில் சாயலைப் போலவும துள்ளித் துள்ளி வருவதைக் கமபர் தனக்கேற்ற சநததத்தில் பின்வருமாறு அமைத்துள்ளார்.

'' பஞ்சியொளிர் விஞசுகுளிர் பலலவ
மனுங்க
செஞசெவிய கஞ்சநிமிர் சீறடிய ளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென அனன
மென மின்னும
வஞ்சியென நஞ்சமென வஞ்சமகள்
வந்தாள்.''

இச்செய்யுளைப் படிக்கும் பொழுது ஒரு அன்னம் துள்ளித் துள்ளி ஓடி வருவது போன்ற ஓசையைக் கேட்க லாம் கம்பர் மெல்லினச் சாயல் பெற்ற மென்னடையாளை வருணிக்க, மெல்லின எழுத்துக்களாலேயே தன கவிதையை அமைத்தார். இதுபோல யாப்பிற்கேற்ற நடையைக் கம்ப ராமாயணத்தில பல இடஙகளில காணலாம். கமபரின் கவித் திறம சிறநது விளஙகுவதை இது போன்ற கவிகளில் காணலாம்

**அவலம் :**

கம்பராமாயணத்தில அவலச்சுவை நிரம்பிய காணடம் அயோத்தியா காணடமாகும். தசரதன் தன்மனைவி கைகேயியின் கால்களில் விழுந்து புலமபுவான். தன் மனைவியின் கால் களில் விழுவது கூடப் பெரிதல்ல. தன் பாசமுள்ள மூதத மகன் இராம னுககு நாடு கிடைக்கவிலலையே என்ற வருததம் கூடப் பெரிதல்ல. தன் உயிரினும் மேலான இராமன் காடு செல்ல வேணடுமே என்று எணணி எணணி அந்த ஒரு வரத்தை மட்டும் தவிர்த்து விடு என்பான். இந்தப் பாடலில் அவலச் சுவை நிரம்பி வழி வதைக் காணுஙகள்.

'' கண்ணே வேண்டு மெனினுமஈயக்
கடவேனென்
உன்னோ ஆவி வேணடினும்
இன்றே உனதன்றோ
பெண்ணே வண்மைக் கேகயன்
மானே பெறுவாயேல
மணணே கொள்நீ மற்றைய
தொன்றும மறவென்றான.''

பரதன் இராமனைப் பார்பபதற் காக காடு நோக்கி வநதாரன. குகன பரதனுடைய நிலையைக் கணடு அழுது கூறுகின்றான்.

'' வறகலையி னுடையானை மாசடைநத
மெய்யானை
நறகலையின மதியென்ன நகைஇழநத
முகததானைக்
கறகனியக கனிகினற துயரானைக்
கண்ணுற்றான்
விறகையினின றிடைவீழ விம்முற்று
நினறொழிநதான்.''

'' நமபியுமென நாயகனை யொக்கின்றா
யனனின்றன றம்பியையு மொக்கின்றன தவவேடந்
தலைக்கொண்டான்
துனபமொரு முடிவிலலை திசை
நோக்கித் தொழுகின்றா
னெமபெருமான் பின்பிறந்தார்
இழைப்பரோ பிழைப்பென்றான்.''

இராவணன் இறந்து கிடக்கும் நிலையில் மணடோதரி புலம்பிப் பாடு வதாக அமைந்த செய்யுள் எல்லோரு டைய உள்ளத்தையும் உருககுவதாக அமைந்துள்ளது. கம்பனே மணடோ தரியாக மாறிப் புலம்பும் காட்சி யைக் காணபோம்.

'' வெளளெருக்கஞ் சடைமுடியான
வெற்பெடுத்த
திருமேனி மேலுங்கீழும்
எள்ளிருக்கும் இடமின்றி உயிரிருக்கும்
இடம்நாடி இழைத்தவாறோ
கள்ளிருக்கும் மலாக்கூந்தல
சானகியை
மனச்சிறையில் கரந்தகாதல்
உள்ளிருக்கும எனககருதி உடல
புகுந்து
தடவியதோ ஒருவன்வாளி.''

**துடிப்பு :**

கமபராமாயணத்தில இலக்குவன் தோனறும இடஙகளிலெல்லாம் அவன் துடிப்பாக இருப்பதாகக கம் பா மிக அழகாகச் சிததரித்துள்ளார். காட்டில் வாழும் இராமனை அழைததுச் செலல வரும் பரதனைக கணட இலககுவன, போரிட வருவ தாகத தவறாக எணணி விடுகிறான். அதனால சீற்றம் கொணடான். இலக குவனின பாத்திரப் படைப்பு முன் கோபமான படைப்பாகும். இப பணபு தவறாமல் அவன் வரும இடங் களிலெல்லாம் தவறாமல் எடுத்தாளப் பட்டுள்ளது. இப்பாட்டிலும் இலக் குவனின் மேறகணட பணபு தெரி வதை அறியலாம்.

'' குதித்தனன பாரிடைக் குவடு நீறெழ
மிதிததனன இராமனை விரைவின
எய்தினன்
மதித்திலன் பரதன்நின் மேலவந
தானமதில்
பதிப்பெரும சேனையின பரபபினன்
எனறான்.''

**மற்றும் சில சந்தப் பாடல்கள் :**

கும்பகர்ணன் உறங்கிக் கொண டிருக்கிறான். பல வீரர்கள் அவன் காதினருகில் சென்று உலக்கையால் தட்டி எழுப்புகின்றனர். உலக்கை குற்றும் ஓசையைக் கம்பன் சந்தத் தில் காணலாம்.

'' உறஙகுகின்ற கும்பகன்ன உங்கள
மாய வாழ்வெலாம்
இறங்குகின்ற தின்றுகாண் எழுநதி
ராய் எழுந்திராய
கறஙகுபோல விறபிடித்த கால தூதர்
கையிலே
உறஙகுவாய் உறங்குவாய் இனிக்
கிடந்து உறங்குவாய்.''

இலங்கைக்கு நெருப்பு வைத்த குரங்கை எணணி இராவணனை பாடு வதாக அமைந்த செய்யுள்.

'' சுட்டது குரங்கெரி சூறை யாடிடக்
கெட்டது கொடிநகர் கிளையு நண்பரும்
பட்டனர் பரிபவம பரந்த தெஙகணும
இடடதிவ் வரியணை இருநத தென்
னுடல.

இராவணன் கம்பீரமாக நடந்து வருவதைக் கம்பர் சந்தத்தோடு அமைத்துள்ளார். அந்த வீர நடை யைக் காண்போம்!

'' சிகரவெண் குடுமி நெடுவரை எவையும்
ஒருவழி திரணடென சிவண
மகரிகை வயிர குண்டலம அலமபும
திண்டிறல தோளிடை வயங்க
சகரவே லையினீர் தழுவிய கதிரில
தலைதொறும தலைதொறும
தயங்கும
வகையபன் மகுடம் இளவெயில்
எறிபபக்
கங்குலும் பகலபட வந்தான்.''

**முடிவுரை :**

இவ்வாறு சந்தஙகளுக்கேற்ப செய் யுட்களை யாதது, படிப்பவர் பலரும் வியந்து பாராட்டும அளவிற்குப் புகழ்பெற்றவன் கம்ப நாடன் என் றால் மிகையாகாது. சந்தம தரும் இன்பம் உள்ளத்தைக் கொளளை கொளகிறது. நம்மையே பாத்திர மாக மாற்றி விடுகிறது. எடுத்துக் காட்டாக இராமாயணத்திலிருந்து சில சநதப்பாடலகளையும் படித்து இராமாயணக் கடலில் மூழ்குவது அனைவரின கடமையாகும். நவில் தொறும நூல நயம் போலும் எனற வளளுவர் வாககிற்கேற்ப, கற்ற திறல் மகிழ்வையும் பெற்று இராமா யணத்தின கதாநாயகனை இராம பிரானின் அருளையும பெறுவோமாக!

★

---

(34-ம் பக்கத் தொடர்ச்சி)

காசியிலிருந்து சில நணபர்கள் ஒரு அமாவாசை இரவு அன்று கட்டுச் சாதம் கட்டிக்கொண்டு கங்கையில் படகின் மூலம் பிரயாகைக்குக் கிளம் பினர். இரவு முழுவதும் அவர்கள் மாறிமாறித் துடுப்புப் போட்டுப் பட கைச் செலுத்தினர். பலபலவென்று பொழுது விடிநதது. 'என்ன அதிச யம்? பிரயாகை நம் காசியைப் போலவே இருக்கிறதே! அதே படித் துறை, அதே கட்டடங்கள', என்று ஒருவன் ஆச்சரியத்தால கத்தினான். மற்றவர்களும் கணணைத் துடைத் துக்கொணடு பார்த்தனர். எல்லாம் காசியைப் போலவே இருந்தது. அப்பொழுது அவர்களில் ஒரு கெட் டிக்காரன், ''ஐயையோ, இது காசியேதான். பிரயாகை அல்ல. நேற்று இரவு நாம் நமது படகின் நங்கூரத்தை அவிழ்க்கவேயில்லை. அதுதான் காரணம்'', என்று உண் மையை விளக்கினான். தங்களது முட்டாளதனத்தை—நொந்தவாறே அவர்கள் தங்கள் தஙகள் வீடு நோக் கிப் புறப்பட்டனர்.

இதைப் போலவே நமது மனததை உலகப் பொருள்களிலி ருநது விடுவிககாமல் நாம் எததனை வருடம் சாதனையில் ஈடுபட்டுப் பயன் என்ன? வீண சிரமமதான் மிச்சம். இதைத்தான் பகவான் 'அக்ருதாத்மான:' (பணபடாத) எனற வார்த்தையின மூலம் குறிப் பிடுகிறார்.

சாதனையில் மேலே செலலச் செல்ல மனம் ஒடுங்கும். ஆணவம் அடங்கும எணணங்கள குறையும் ஆசைகள் அகலும். அப்பொழு தான் இறைவனின சாக்ஷாத்காரம கிட்ட வாய்பபுணடு.

இநத சுலோகங்களில் ஆத்மனைப பற்றிய விளககம படிப்படியாக தரப படுகிறது. சூரியன், சந்திரன, தீ போன்ற சாதாரணப் பொருள் களால் ஆத்மனை விளக்க முடியாது. ஆத்மனை (அதாவது இறைவனை)— அடைநதவர்கள் திரும்பி வருவ தில்லை. ஜீவாகள் அனைவரும் ஆதம சொரூபமே எனற கருததுக்கள் கூறபபட்டன.

இனி வரும் நான்கு சுலோகங்க ளில் இறைவனின் சர்வ வியாபகத தன்மை விளக்கப்படுகிறது. 1) அனைத்தையும் ஒளிர்விக்கும் உணர்வுமயமான அருட்பெரும் ஜோதி. 2) அனைத்து உயிருககும் அடிப்படை 3) அனைத்து ஜீவ ராசி களிலும் இலங்கும் உயிர்த் ததது வம். 4) அனைதது இதயத்திலும் ஒளிரவது என்ற கருத்துக்கள விளக கப்படுகின்றன.

ஆத்மனைப் பறறிய அறிவு எளி தில் அறிந்து கொள்ள முடியாத ஒன்றாகும். எத்தனை முறை படித தாலும், எவர் மூலம் கேட்டாலும் புரியவொணணாத அற்புதமான தத் துவம அது. புரிவது போல இருக் கும. ஆனாலும் புரிந்துகொளள முடியாது. அத்தகையதொரு பரம ரகசியததை பகவான் இச் சுலோ கங்களில நமக்குப் புரிய வைககிறார்.

(தொடரும்)

# மறையோனின் மனக்குறை!

சாதாரணமாக, கல்யாணம் என்றாலே, நமக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறதே! தெய்வங்களுக்குத் திருமணம என்றால், எப்படியிருக்கும்! அதிலும் ஸ்ரீராமனுக்கும் ஸீதைக்கும திருமணம் என்றால், எத்தனை கோலாகலமாயிருந்திருக்கும்! மிதிலை நகரமே விழாககோலம் பூண்டது. ஒவ்வொரு வீட்டிலும செமமணணைக் குழைத்து, மணைககோலம. பாக்கு, வாழை, கமுகு மரங்களுடன் கூடிய அலங்காரப் பந்தல்கள், விதவிதமாக பூ அலங்காரங்கள், வாண வேடிக்கைகள், தீப அலங்காரங்கள். கண்கொள்ளாக் காட்சிதான். திருமண மணடபத்தை தேவ சிற்பியான மயன்தான அலங்கரித்திருக்க வேணடும். அத்தனை அற்புதம!

ஜனக சக்ரவர்த்தியும் மகிழ்ச்சியில் நிலைகொள்ளாது தவித்தார். சாதாரண மாப்பிளளையா! சிவதனுசையே முறித்த பராக்ரமசாலி-அத்துடன் அழகன். இவருக்கு சமமான ஒரு சக்ரவர்த்தியின் திருமகன். பின், அவர் மகிழ்ச்சிககுக் கேட்கவா வேண்டும்!

முகூர்த்த வேளையும் நெருங்கிற்று அரணமனைப் புரோகிதர், ஸநாதனா மந்திரங்களைக் கூற, தம் கணணுக்குக் கண்ணான மகளை தாரை வார்த்துக் கொடுத்தார். கணகளில் ஆனந்தத் தாரை; வானவர் பூமாரி பொழிந்தனர். தேவ பேரிகைகளும் துந்துபியும், சங்கமும் ஆர்த்தன. பல்லாணடு பாடினர். ஆயிற்று. மணமகன் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி, ஸீதாபிராட்டியின் கழுத்தில் மங்கலநாணையும் அணிவித்தான். அதைத் தொடர்ந்து அம்மி மிதித்து, அருநததிப் பார்த்தனர். லாஜஹோமம் எனப்படும் பொரியிடுதல் நடைபெறவேணடும். ஸீதையின் ஸஹோதரன், அரிசிப் பொறியை மும்முறை எடுத்துக கொடுக்க, மணமக்கள் இருவருமாக அதை அக்னியில் இடவேண்டும்.

பொரியிடப போகும் ஸீதையின் ஸஹோதரனுக்காக, தசரதன் ஸம்பாவனை செய்ய, தங்கத் தட்டில் பட்டு வேஷ்டி, உத்தரீயம, சொக்கத் தங்கத்தில் நவமணிகளையும் இழைத்துச் செய்துள்ள மிக விலையுயர்ந்த அழகிய மோதிரம், வெற்றிலை பாக்கு, சந்தன மரியாதைகளுடன காத்துக் கொண்டிருக்கிறார்.

ஆனால் ஜனகர் பக்கம்தான் இன்னும் தயாராகவில்லை ஏனெனில், ஸீதைக்கு ஏகாந்த ஸஹோதரன் கிடையாதாகையால், யாரைக் கொணடு பொரியிடச் செய்வது என்று ஒரு சிறு குழபபம். கடைசியில் யாரோ பொரியிட்டனர்.

மணையில் உட்கார்நதிருந்த ராமனின் மனத்தில் பலப்பல எணணங்கள். 'அடாடா! ஸீதைக்கு சொந்த ஸஹோதரனே கிடையாதா என்ன! ஜனகரோ,' 'அடிககடி வந்துபோய்க் கொணடிருக்கவேணடும,மாப்பிள்ளை' என்று இப்போதேசொல்லிவிட்டார். இவா அழைபபை ஏற்று, அடிக்கடி மிதிலைக்கு வந்தால், நமக்குப்பேச்சுத் துணைக்கு யாருமே இருக்கமாட்டார்களே. ஜனகர் மாமனாராகி விட்டார், வயசானவா.மேலும் அவர் ராஜரிஷி. மஹாவேதாந்தி.அவருடன் வேதாந்த விசாரம் செய்யும் வயதா நமக்கு? அவரும்,நம்முடன் நமக்காகப் பாவம் எத்தனை நேரந்தான் லோக விஷயங்களைப் பேசுவார்? என்ன இருந்தாலும், ஒரு மைத்துனன் இருப்பதைப் போலாகுமா? வேடிக்கையாக ஆடவும், ஊர சுற்றிப் பார்க்கவும், அரட்டையடிக்கவும்,வயதுக்கொத்தமைத்துனன் வேணடாமோ?'' என்று விசாரப்பட்டான்,ஸ்ரீராமன்.

பின்னர் ஒருவாறு தெளிந்து, ''சரி போனால் போகட்டும். இந்த அவதாரத்தில்தான் நாம்மைத்துனன் இல்லாது கஷ்டப்படப் போகிறோம். அடுத்த க்ருஷ்ணாவதாரத்திலாவது, நமக்கு ஒரு மைத்துனன், கட்டாயம் வேணடும்'' என்று எணணிக்கொண்டே புன்முறுவல் பூத்தான். அந்த மாயனின் மாயததை அறிந்தவர் யார்!

க்ருஷ்ணாவதாரத்தில், இவன் முன்பு எண்ணிக் கொண்டபடியே,

**மைதிலி வேணுகோபால்,**
சென்னை

வந்து சேர்ந்த அந்த மைத்துனன் யார்? ருக்மிணியின் அண்ணனான ருக்மியா? சீச்சி ஒருக்காலும் இல்லை. ஸ்ரீ க்ருஷ்ணனின் உண்மை நிலைமை அறியாது, அவன் சாக்ஷாத், ஸ்ரீமந் நாராயணன் என்று புரிந்து கொள்ளாது தன் தஙகை ருக்மிணியை திருமணம் செய்து தரமாட்டேன் எனறு. க்ருஷ்ணனுடன் போர் புரிந்த அந்த நீசன ருக்மி பெருமானின் மைததுனனாக இருக்கவே முடியாது.

பின் யார அநத மைததுனன்?

அவனை, அநத மைத்துனனை, ஆண்டாள்தான், தன் திருப்பாவையில் அடையாளம் காட்டுகிறள்-12-ம் பாசுரத்தில். அவனைச் சற்று காண்போம்.

7-ம் நம்பர் இல்லம். சாதாரண மண தரைதான். வீட்டுக்கு, தலைவன்

பாவம், மிகவும் வயதானபடியால், தன் மனைவியுடன், ஓய்வு எடுத்துக் கொண்டிருக்கிறார். பாலைக் கறந்து, விற்று வரும் தொழிலை மூத்த மகன் தான் ஏற்று நடத்தி வருகிறான். இவரது பெண்ணை, இந்த மூத்த மகனின் தங்கையை, ஆண்டாள் எழுப்புகிறாள்.

"கறப்பாரின்றி, எருமைகள், மடி கனத்துப்போய், பாலைப்பீய்ச்சி அடித்திருக்கின்றனவே. அதனால் வீடே பால் சேறாகி விட்டதே. அப்படிப் பட்ட நற்செல்வனின் தங்கையே! எழுந்திரு! இலங்கையின் ராவணனை முடித்த அந்த மறையோனின் புகழ் பாடுவோம் வா" என்கிறாள்.

ஏன், கறப்பாரின்றி போய்விட்டது நிலைமை! வேளாவேளைக்குப் பாலைக் கறந்து, விற்று, மிஞ்சிய பாலையும் தகுந்தபடி ஒழுங்கு படுத்தும் வேலைதான், இடையர்களுக்கு இல்லையா! பாலைக் கூடக் கறக்காமல் தன் தொழிலைக் கூட செய்யாமல இந்த மூத்த மகன், அப்படி என்ன தான் செய்து கொண்டிருந்தான்? பாலை, எருமைகள் பீச்சி அடிக்கும் அளவு போவானேன்!

நற்செல்வன், வேறு என்ன செய்வான்? தன் ஜீவனத்தைக் கூடச் செய்யாது, ஸ்ரீக்ருஷ்ண பக்தியில் ஈடுபட்டு, ஸதா க்ருஷ்ணனின் நினைவாகவே இருநது விட்டதால், ஸ்ரீ க்ருஷ்ணனின் கூடவே சுற்றிக் கொணடிருப்பதால், தன் தொழிலை, ஜீவனத்தை அறவே மறநது விட்டான். அதனால்தான், கறக்கும் வேளையும் தப்பிப்போய், எருமைகள் மடிகனம் தாங்காது, பாலை தாமே பீச்சி அடிக்குமாறு நேர்ந்துவிட்டது. அப்பப்பா! எனனே அவன் க்ருஷ்ண பக்தி! அப்படிப்பட்டவனின் தஙகையைத்தான் க்ருஷ்ணன் மணப்பான். பரமபக்தனை மைத்துனன் தான் க்ருஷ்ணனுக்கு வேண்டுமே தவிர, ருக்மியைப் போன்ற மைத்துனன் வேணடவே வேணடாம்

இவள தங்கையை ஸ்ரீக்ருஷ்ணன் மணந்து, நற்செல்வனைத் தன் அபிமான மைத்துனனாக்கிக் கொணடு, ராமாவதாரத்தில், தனக்கேற்பட்ட, அந்த மகத்தான மனக்குறையைப் போக்கிக் கொணடான் அநத மறையோன். ராமாவதாரத்தில் அவனுக்கேற்பட்ட மனககுறையை ஒரு சிறிதளவேனும் போகக வேணடுமென்ற எண்ணததில்தான், ஆணடாள, "சினததினால் தென் இலங்கைக் கோமானை செற்ற மனத்துககினியானைப் பாட வா" என்று ராமனைப் பாட அழைககிறாள்.

இப்படிப்பட்ட பரமபக்தனை கௌரவிக்க எண்ணிததான் ஆணடாள், சாதாரண செல்வனாக இருநத இவனை நற்செல்வன் ஆக்கிவிட்டாள். மறையோனும், நற்செல்வனுக்கு, வாஙகக குடம் நிறைக்கும் வள்ளல் பெரும் பசுக்களை நிறையககொடுதது இம்மையிலும், மறுமையிலும் அவனை நற் செல்வனாக்கி விட்டான். ★

# திரிநேத்ர தசபுஜ வீரஹனுமான்

**அனந்தமங்களம் ராஜகோபாலன்**

இந்து மதம் பரவிய தேசமெங்கும் தரிசிக்க முடியாத விஸ்வரூப ஹனுமனை தஞ்சை மாவட்டம் மயிலாடு துறையிலிருந்து தரங்கம்பாடி செல்லும் நெடுஞ்சாலையில் உள்ள அனந்தமங்களம் என்னும் தலத்தில் தரிசிக்கலாம். இத்தலத்தில் ஹனுமான் மூன்று கண்களுடன், பத்து கைகளுடன் காட்சியளிக்கிறார். ஹனுமன் விஸ்வரூபத்துடன் இத்தலத்தில் எழுந்தருளியது ஏன் என்ற கேள்விக்கு விடைகாண இத்தலத்தின் ஸ்தல புராணத்தைக் காணபோம்.

அக்ஷய குமாரன் ஜம்புமாலி முதலிய அரக்காகளை ஸ்ரீராமபிரான் இராவண சம்ஹாரத்தின்போது அழித்தார். அதனால் கோபம் கொண்ட இரத்தபிநது, இரத்த ராக்ஷதன் என்னும் அரக்கர்கள் ஸ்ரீராமபிரானை பதிலுககு வதம் செய்ய ஜலத்தில் மூழ்கி தவம புரிந்தனர். இச் செய்தியை நாரதர் மூலம் அறிந்த ஸ்ரீராமபிரான் அரக்கர்களை அழிக்க புறப்படுகிறார். உடனே இராம தூதனான ஹனுமான் தான் சென்று அரக்கர்களை வதம் செய்துவிட்டு வருவதாகவும், அதற்கு அனுமதி தருமாறு ஸ்ரீராமபிரானை வேணடினான். இராமனும் அனுமதியளித்துத் தன்னிடம் உள்ள தனுசு, அம்பு ஆகியவற்றை ஹனுமனிடம் கொடுத்தார். சீதாதேவி சிறிது நவநீதத்தை ஹனுமனிடம் கொடுத்து அது உருகுமுன் அரககர்களை அழிக்குமாறு வேணடினாள். ஹனுமன் அரக்கர்களை அழிக்க புறப்படும் சமயத்தில் ப்ரமன், சிவன், இந்திரன், எமன் முதலான அஷ்டமூர்த்திகளும் தங்கள் ஆயுதங்களை ஹனுமனிடம் கொடுத்து அரககர்களை அழிககுமாறு வேண்டினர். ஹனுமனும் விஸ்வரூபமெடுத்து அவ்வாயுதங்களை பெற்றுக் கொணடார். அது சமயம் பெரிய திருவடியான கருட பகவான் தனது இறக்கைகளை ஹனுமனுக்கு அளிதது பறநது சென்று அரக்கர்களை அழிக்குமாறு கூறினார். ஹனுமன் அவ்வரக்கர்களை அழித்து ஆனந்தத்துடன் இத்தலததில் எழுநதருளினார்

இந்த ஹனுமனுக்கு பத்து கைகளில் முறையே சங்கு, சக்கரம், பணி, சினி, திரிசூலம், மத்தாட்சரம், பாசம், தனுசு, அமபு, நவநீதம் முதலியன உள்ளன. நெற்றியில் சிவனிடம் இருநது பெற்ற நெற்றிக் கணணுடன் ஹனுமான் காட்சியளிக்கிறார்.

சனி, இராகு, கேது தோஷநிவர்த்திக்காக, பிரதி சனிக்கிழமை, அமாவாசை, மூலா நட்சத்திரம் முதலிய தினங்களில் ஆயிரக்கணககான பக்தர்கள் இநத ஹனுமனைத் தரிசித்து அருள் பெறுகின்றனர். நாமும் இந்த ஹனுமனைத் தரிசித்து அருள் பெறுவோமாக.

# கூடல் நகர் கண்ட ஆழ்வார்

நாம் இறைவனுக்கு அடிமையாய் அவர் வயப்பட்டுநிற்கும் இயல்புடையோம் என்பதனை உணர்ந்து, அவனையே தஞ்சமாகப் பற்றி அவனது அருளால் உயர்வடைதலே பிரபத்தி நெறி எனப்படும். பக்தியின் முதிர்ச்சியால் பிரபத்தி நிலை வரும் போது பக்தன தனக்கென ஒன்றைக் கோராது இறைவனுடைய இஷ்டப் படியே தன்னைவைத்து அனுபவிக்கும் படி விட்டு விடுகிறர். பகவானின் சங்கல்பப்படியே சிலர் அவருடைய குண மகிமையிலும், சிலர் அவரைப் பூஜிப்பதிலும், சிலர் தாஸ்ய பாவனையிலும், சிலா நாயகி பாவனையிலும் சிலர் ஆத்மஸமர்ப்பணத்திலும் பிரேமை கொள்கின்றனர்.

ஆத்மாக்கள் பிறவியிலேயே இறைவனுக்கு வாழக்கைப்பட்டு அவனால் அணியப்பட்ட மங்கல நாணாகிய (அஷ்டாட்சர திருமந்திர) சம்பந்தத்தை உடையவராகின்றனர். சம்பந்த ஞானம் முதிர்ந்து விவேக தசையினை அடைந்து நாயகனாகிய இறைவன் மேல பக்தியாகிய காதல் கொள்கின்றனர். அவர்களது மெய்க்காதலில் ஈடுபட்டு இறைவன் அவர்கள் முன்பு தோன்றியும், கூடியும், பிரிந்தும் அவர்களது காதலைப் பெரிதும் வளரச் செய்கின்ருன். காதல் கனிந்து, இறைவனுடன் இடையருது வாழத் துடிப்போரை இந் நிலவுலகினின்றும் அழைத்துச் சென்று தனது அழிவில்லாத வீடாகிய நித்ய விபூதியில் வாழச் செய்து இடையருத பேரின்பத்தில் திளைக்கச் செய்கின்ருர். இஃது ஆன்மாக்களுக்குரிய மிக உயர்ந்த பேராகும்.

"மானிடர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய்" என்றுரைத்தாள் வில்லிபுத்தூரில் அவதரித்த கோதை நாச்சியார். "குலப் பெருமையைக் காற்றில் பறக்கவிட்டு விட்டேன், ஹரியே என்மணாளன், அவனது அடியவர்களே என் பந்துக்கள்" எனத் தேனினும் இனிய குரலில் பாடிக் களித்தாள் மேவாரின் மீரா. திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும்கூட நாயகி பாவனையில் அரங்கன்மேல் தீராக் காதல்கொண்டு பாசுரங்கள் பாடியுள்ளனர். இத்தகைய நாயகி பாவனையோடு கண்ணனைக் காதலித்து அவனுடன் இரண்டறக் கலந்த பெரியவர் ஒருவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் நான் மாடக் கூடல் நகராம் மதுரைம்பதியில் ஸ்ரீமந் நடனகோபால சுவாமிகளாக அவதரித்திருந்தார். கண்ணின் மணியான கோபாலனிடம் கொண்ட பிரேமை மிகுந்த அவரது பாடல்கள் கருத்தாழம் செறிந்தவை.

"கண்ணின் நாமமே இனிய பழம், எடுத்துச் சுவைப்பீர் தாஸர்களே" எனப் பாடிய ஸ்ரீ நாயகி சுவாமிகள் மதுரையில் சௌராஷ்டிர சமூகத்தில் 1843-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் ஒன்பதாம் தேதி மிருகசீர்ஷ நட்சத்திரத்தில் ரங்காரியர், லெட்சுமி அம்மாள் அருட்தம்பதிகட்குப் புத்திரராய் அவதரித்தார். ராமபத்ரன் எனப் பெயரிடப் பெற்றுச் சிறு பிராயத்திலிருந்தே தியானபரராய், மோனபரராய்த் திகழ்ந்தார். அற நூல்களின் சாரத்தையெல்லாம் அவர் தம் ஆத்மஞானத்தினுலேயே உணர்ந்தார். குலத் தொழிலாகிய நெசவுத் தொழிலிலும் மனம் ஈடுபடவில்லை. பிள்ளை பொறுப்பின்றியிருப்பதைக் கண்ட தந்தை கடிந்து பேச, வைராக்கியம் பிறக்கிறது பிள்ளையின் உள்ளத்தில்.

ஒரு நாள் இரவு தம் பந்தங்களை யெல்லாம் அறுத்துக்கொண்டு வீட்டை விட்டுப் புறப்பட்டான் அப் பாலகன். பல பிறவிகளில் பக்குவப் பட்டு வந்த பிள்ளையின் உள்ளத்தில் தவ வேட்கை கொழுந்து விட்டு எரிகின்றது. திருப்பரங்குன்றமடைந்து அங்கோர் குகையில் தவமியற்றிக் முருகன் அருளால் நாகலிங்கஅடிகள் என்னும சாதுவிடம் முறையாக யோகம் பயின்று யோகசித்தரானுர். சிவகங்கையை ஆண்ட மன்னரால் பல சோதனைகளுக்கு உட்படுத்தப் பட்டு வெற்றியும் பெற்ருர்.

சதானந்த சித்தராய்ப் பல தவங் கட்கும் சென்றுப் பின்னர் ஆழ்வார் திருநகரி அடைந்தார். மதுரகவியாழ்வார் தம் ஞான குருவாக நம்மாழ்வாரைத்தேடி அடைந்த அதே ஊரில் மிகச் சிறந்த பக்தரான வடபத்ராரியார் என்பவர் நம் சுவாமிகளைச் சீடராக விரும்பி ஏற்ருர். ராஜயோகி பக்தியோகியாகி, முழு வைஷ்ணவராக மாறி த்வாதச நாமம் தரித்து நடனகோபால சுவாமிகள் என்னும் பெயர் பெற்று குருவின் மஹிமையால் ஹரியின் முழு கிருபையும் பெற்ருர். பின்னர் குருநாதரிடம் விடை பெற்று வில்லிபுத்தூர் அடைந்து நாச்சியார் சன்னிதானத்தில் கோதையைப் போன்றே கோவிந்தனைப் பாடி அவன் மீது காதலால் கசிந்துருகி நின்ருர்;

"ஜீவாத்ம கோடிகள் எல்லாம் ஸ்திரீ பிராயம் என்று அறிவாய்" எனப் பாடிய சுவாமிகள் கண்ணனைக் காமுற்ருர். இது விஷயந்தரத்தோடு இயைந்த காமம் அன்று. இறைவ

திரு. என.எம்.ஆர்.எஸ். சந்திரகாந்தன்,
மதுரை.

ளோடு ஒன்றும் தூய பக்தி என்னும் காமம். ''ஜீவாத்மனுக்கு எக்காலத்திலும் சுதந்திரமான தன்மை கிடையாது. இறைவனாகிய புருஷனையே சார்ந்திருக்க வேண்டும்'' எனப் பாடினார். பின்னர்த் திருவரங்கம் அடைந்து பள்ளி கொண்ட பெருமானிடம் மனதைப் பறிகொடுத்துக் கண்களில் நீர் பெருக்கெடுத்தோடக் காதலினால் மெய்மறந்து நின்றார். அல்லும் பகலும் அரங்கனையே நினைத்துருகி அன்னத்தைவெறுத்து மெலிந்தார். '' இன்னமும் ஜன்மம் தர உனக்கு எண்ணம் உண்டோ? சொல்லடா ஸ்ரீரங்கா '' என முறையிட்டார். இவரது ஒவ்வொரு நாடித் துடிப்பிலும் நாயகி பாவமே மிகுந்திருப்பதைக் கண்ட ஸ்ரீரங்கம் ஜீயர் சுவாமிகள் இவருக்கு ''நாயகி'' என்னும் பட்டம் சூட்டிக் கௌரவித்தார்.

நடன கோபால நாயகி சுவாமிகள் பாடியுள்ள ஒவ்வொரு பாடலும் மெய்மறக்கச் செய்து, பவித்ரமான பக்தி உணர்வினைத் தூண்டும். மதுரை நகர வீதிகளில் சுவாமிகள் கோதை நாச்சியாரைப் போன்றே தொண்டையிட்டு, பெண்ணுடை அணிந்து, கால்களில் சிலம்பணிந்து, கோவிந்தனின் நாமத்தைப் பாடியும் ஆடியும் பரவசமுற்றார். கண்ணனைப் பிரிந்த கோபிகையாக பிரேம தாபத்தால் வாடினார்.

தம்முடைய நாயகியை கோவிந்தன் ஏற்றுக் கொள்ளும் நாள் வந்தது. நாயகி சுவாமிகள் தம் எழுபதாவது வயதில் தன்னுடைய நாயகனான கோவிந்தனிடம் ஜீவ சமாதியாக இருந்து கலந்தார். மதுரைக்கு வெகு அருகில் உள்ள காதக் கிணறு என்னும் கிராமத்தில் நாயகி சுவாமிகளின் அதிஷ்டானம் மிக அழகான முறையில் அமைந்துள்ளது. நாயகி சுவாமிகளின் சமாதியின் மீது நடன கோபாலன் திருஉருவம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, விழாக்களும் பஜனைகளும் நடத்தப்பெறுகின்றன. சுவாமிகள் இன்றும் தம்முடைய அதிஷ்டானத்தில் பற்பல அற்புதங்களைச் செய்து வருகின்றார். நாயகி சுவாமிகளை பத்தொன்பதாம நூற்றாண்டின் ஆழ்வார் என்று சொல்லுமளவிற்கு அவரது பாடல்கள் கருத்தாழமும் பக்திச் சுவையும் பொலிந்து விளங்குகின்றன.

வாழ்க திரு நடன கோபாலநாயகி சுவாமிகளின் நாமம்! ★

## தெய்வீக மணம் வீசும் கோயில்

புலவர் அ. க முனுசாமி, எம்.ஏ. விழுப்புரம்.

திருப்பதியில் வீற்றிருக்கும் வேங்கடேசா!
தீராத துயரெல்லாம் தீர்க்கும் நேசா!
திருப்பாத கமலமலர் மனத்தில் சேர்த்துத்
திசைநோக்கித் தொழுதிடுவார் இருகை கோத்து;
ஒருமையிலா உளத்தினிலும் ஒன்றி நின்று
உண்மைவழி காட்டிநிதம் வணங்கச் செய்வாய்;
இருப்பேதும் இல்லாத இதயத் தாரின்
இருப்பாக நீஇருப்பாய் துணைவ னாக.

மலைமீதே இருந்தாலும் அனைவர் நெஞ்ச
மலர்மீது தாமாகக் குடிபு குந்தாய்;
சிலையாக நிற்கின்றாய் என்று சொல்லும்
செய்தியெலாம் வெறும்பேச்சே; மக்கள் நெஞ்சில்
கலையானாய்; சிரிக்கின்ற சிலையே யானாய்;
காருண்ய மணிவண்ணா! கனிவு கொண்டு
தலைவணங்கித் தினம்உன்னைப் போற்று வார்க்குத்
தவறாமல் செல்வியுடன் வந்து காப்பாய்.

கண்ணாஉன் பக்தர்க்கு நீசெய் கின்ற
கருணைக்கே அளவேது? கணக்கே ஏது?
எண்ணத்தில் உனைவைத்துப் போற்றும் பக்தர்
இயற்றும்நற் காரியங்கள் முடித்து வைப்பாய்;
உண்மையாய் உனைநம்பி வணங்கும் அன்பர்
உளக்கவலை அத்தனையும் தீர்த்து வைப்பாய்,
விண்ணாரும் காரவண்ணா! விரும்பி நீதான்
வீற்றிருக்கும் இடமெல்லாம் வினைகள் தீர்ப்பாய்.

தீர்த்தமெல்லாம் பொழிகின்ற வேங்கடத்தில்
தெய்வீக மணம்வீசும் கோயில் தன்னில்
சீர்த்தமுடன் வீற்றிருந்து செங்கோல் ஆட்சி
செகமுழுதும் செய்கின்ற தேவ தேவா!
நேர்த்தியுடன் உனைநெஞ்சில் வைத்துக் காக்கும்
நேயர்தம் வாழ்வினிலே இன்பம் சேர்ப்பாய்;
கீர்த்தியுடன் வாழ்ந்திடவே வகைகள் செய்வாய்;
கேசவனே! உனைமறவா மனத்தைத் தாராய்.

மனத்திலுள்ள கவலைகளை நீக்கு தற்கு
மலைமேவிக் குடியிருக்கும் மணியின் வண்ணா!
தினம்உன்னைக் கேட்கின்றேன்; உன்னை யன்றித்
திக்கெனக்கு எவருண்டு? நீசொல் வாயே!
தினம்உன்னைத் தொழும்படியாய்ச் செய்து வைத்துத்
திருமகளும் கூடிவரக் காட்சி தந்து,
மனமகிழ்ச்சி, நிறைவாழ்நாள் வேண்டு மட்டும்
மாணபுடனே தந்துஎம்மை ஆத ரிப்பாய்.

# பொன் விழா சிறப்புச் செய்தி

திருமலை - திருப்பதி தேவஸ்தான நிர்வாகத்திற்கு ஐம்பது ஆண்டு நிறைவு விழா, ஆனந்தமான பொன் விழா. 7-6-1933 அன்று புதிய நிர்வாக அமைப்பு செயல்படத்தொடங்கியது. காலப்போக்கில் புதிய, பயனுள்ள ஏற்பாடுகள் கோவில் நிர்வாகத்தின் உண்மையான இலட்சியங்களுக்கு உருக்கொடுத்தன. ஐம்பது ஆண்டுகளில் பலப்பல வகைகளில் மேம்பாடு அடைந்து, சமய வளர்ச்சிக்கும் ஆன்மிக மறுமலர்ச்சிக்கும் அயராது பாடுபட்டு வந்திருக்கும் தேவஸ்தான அமைப்பிற்கு இது ஒரு பெருவிழா.

ஞாயிறு, ஏப்ரல் 22, 1984, காலை

பொன் விழா 1984 ஏப்ரல் 22 முதல் 24 வரை மூன்று நாட்கள் பொலிவுடனும் ஏற்றத்துடனும் இந்து சமய உலகு பலகாலம் நினைவில் வைத்துக் கொள்ளும் வகையில் சீரும் சிறப்புமாகக் கொண்டாடப்பட்டது.

துவக்க நாளிற்கு முந்திய தினமே திருப்பதியும் திருமலையும் விழாக் கோலம் பூண்டு எழிலுடன் விளங்கின. விழாக்கூடத்திலிருந்து மாலவன் குன்றமான மலை வரை முக்கிய சாலைகளின் இரு மருங்கிலும் வண்ணத் தோரணங்கள் விழாக்காண வருவோருக்கு நல்வரவு கூறுவனபோன்று மென்காற்றில் அசைந்தாடிக்கொண்டிருந்தன. பாதை நெடுகிலும் 'உடம்பே இறைவன் கோயில்', 'சொல்வது எளிது, செல்வது அரிது' 'இறைவன் ஏழைப் பங்காளன்', அனைத்தையும் துறந்து என்னையே சரணடையவும்' என்பன வாசகங்களைத் தெள்ளிய தெலுங்கில் தாங்கியிருந்த ஐம்பது அலங்கார வளைவுகள் அனைவருக்கும் முகமன் கூறி நின்றன.

திருவேங்கடவன் பல்கலைக்கழக விளையாட்டு அரங்கில் எழிலுடன் நிர்மாணிக்கப்பெற்றிருந்த மாபெரும் அலங்காரப் பந்தலில் தேவஸ்தான ஆஸ்தான கலைஞர் திரு. நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் அவர்களின் மனத்தை அள்ளும் நாதஸ்வர இன்னிசையை மக்கள் பார்த்து மகிழ்ந்து கொண்டிருக்கும் காலைப் பொழுதில் தேவஸ்தான அலுவலர்கள் கடைசி நிமிடம் வரையிலும் கூட, விழா மேடையில் மட்டுமின்றி, பல்வேறு தேவஸ்தான பிரிவுகள் அமைத்திருந்த அருங்காட்சி அகம், தாஸ சாகித்ய அமைப்பு, ஸப்தகிரி பத்திரிகை, நூல் வெளியீட்டுப் பிரிவு ஆகிய காட்சிக் கூடங்களிலும் ஒவ்வொரு ஏற்பாட்டினையும் மெருகிட்டுக் கொண்டிருந்தனர்.



வண்ண எழிலுடன் திகழ்ந்த விசாலமான விழா மேடையின் மீது, திருமலைக் கோவிலின் ஆனந்த நிலைய விமானம், அதன் நடுவில் திருவேங்கடவன், இருமருங்கிலும் சங்கு மற்றும் சக்கரம் ஆகியவை வரையப் பெற்றிருந்த பல்வண்ண மாபெரும் ஓவியப் பலகைகள் பின்னணியாக நிறுவப்பட்டிருந்தது விழாக் காண வருவோரின் கவனம் அனைத்தையும் ஒருங்கே ஈர்த்துக் கொண்டிருந்தது என்பது மிகையேயன்று.

பந்தலில் முக்கியமான இடங்களில் காண்போர் நிகழ்ச்சிகளைச் சிரமமேதமின்றிக் கண்டு களிக்கும் வகையில் தொலைக்காட்சிப் பெட்டிகள் இடுப்பளவு உயரத்தில் அமைக்கப் பெற்றிருந்தன. பந்தலில், சிறப்பு விருந்தினர்களுக்கு, பாராட்டுப் பெறும் புலவர் பெருமக்களுக்குப் பொன் விழாவில் பங்கு கொள்ள தொலை ஊர்களிலிருந்து வந்திருக்கும் பஜனைக் குழுக்களுக்கு, பொதுமக்களுக்கு எனத் தனித்தனி அடைப்புகள் வசதியாக அமைக்கப்பெற்றிருந்தது அனைவருடைய ஒருமித்த பாராட்டுதலைப் பெற்றது.

மாந்தர் அனைத்தினரின் நலத்தினை நாடும் வகையில் பொழுது புலர்ந்த வுடனேயே தொடங்கப் பெற்றிருந்த 'மஹா சாந்தி ஹோமம்' நிறைவை நெருங்கிக் கொண்டிருந்தது. திருப்பதி திரு. கோவிந்தராஜஸ்வாமி தமது இரு தேவியருடன், யானை, குதிரை, எருது, மாபெரும் பட்டுக் குடைகள், நாதஸ்வர இசை வேத பாராயணம் போன்ற பிருதுகள் புடை சூழ, பந்தலில் எழுந்தருளி விழாவிற்கு தெய்வீக அருளை வழங்கினார்.

ஆந்திர மாநில முதல்வர் மாண்புமிகு திரு. என்.டி. ராமாராவ் அவர்கள் பநதலின் முகப்பில்வந்து சேர்ந்தவுடன் தேவஸ்தான மேலாண்மைக் குழுவின் தலைவரான திரு. வி. கே. டி. வி. சத்திய நாராயணராஜு, எம்.எல் ஏ. மறறும் உறுப்பினர்கள் தேவஸ்தானச் செயலாட்சித் தலைவரான திரு. தி. குமாரசுவாமி ரெட்டி ஐ ஏ.எஸ்., ஆந்திரப்பிரதேச அரசின் தலைமைச்செயலர் திரு. பி. ஜெய் ஸிம்ஹா, ஐ. ஏ. எஸ். மற்றும் தேவஸ்தான, அரசு அதிகாரிகள் ஆகியோரால் பூர்ண கும்பமளிக்கப்பட்டு

வேத ஒலிகளுடனும் நாதஸ்வர இசையுடனும் வரவேற்கப்பட்டார்.

உற்சவ கோவிந்தராஜஸ்ரையும் இரு தேவியரையும் வணங்கிய பிறகு, திரு. ராமாராவ் தமது மனைவி பின் தொடர 'மஹா சாந்தி ஹோமம்' நடைபெறும் இடத்தை அடைந்து பூர்ணாகுதியாக தேங்காய், பழம், மூலிகைகள், பட்டுத் துணி, நெய் முதலியவற்றை மறையோர்கள் மந்திரம் சொல்ல அக்நியில் பக்தியுடன் சொரிந்தார்.

முதல்வரும் பிறரும், பார்வையாளர்களின் விண்ணைஎட்டும் கரவொலிகளுக்கிடையே விழா மேடையில் நேர்த்தியான இருக்கைகளில் அமர்ந்தனர். தேவஸ்தான மேலாண்மைக் குழுத் தலைவர் திரு. வி. கே. வி. டி. சத்யநாராயண ராஜு, எம். எல். ஏ. தலைமை வகித்தார்.

தேவஸ்தானத்தின் எஸ். வி. பால மந்திரைச் சேர்ந்த சிறுவர் சிறுமியர் பகவத் கீதையின் தேர்ந்தெடுக்கப் பட்ட சுலோகங்களை இனிய குரலில் பாடி இறைவணக்கம் நிகழ்த்தினர்.

தொடர்ந்து வேத வாசகங்கள் கொண்டஇறைவணக்கம் மறையோர்களினால் ஓதப்பட்டன.

தேவஸ்தான மேலாண்மைக் கழக உறுப்பினர் திரு. பி. வெங்கடேஸ்வரலு மாநில முதல்வருக்கும் ஏனையோருக்கும் நல்வரவு கூறி, அறநிலையத் துறைப் பொறுப்பினையும் ஏற்றுள்ள முதல்வர் திரு. என். டி. ராமராவ் அவர்களை பொன் விழாவினைத் துவக்கி வைத்தது சாலப் பொருத்தம் என்று கூறினார்.

விழாவிற்குத் தலைமை வகித்த தேவஸ்தான மேலாண்மைக் குழுத் தலைவரான திரு. வி. கே. டி. வி. சத்யநாராயணராஜு, எம். எல். ஏ., தமது தலைமையுரையில், சநாதன தர்மத்திற்கு இருப்பிடமாகக் கருதப் படும் நமது பாரத நாட்டில் கலியுக வைகுண்டம் எனக்கருதப்படும் திரு



மலையில் உள்ள திருவேங்கடவன் கோவில் மற்றும் திருப்பதி, திருச்சானூர் முதலிய இடங்களிலுள்ள ஆலயங்கள் ஆகியவற்றைச் சிறப்புடன் நிர்வகித்துவரும் தேவஸ்தானம் நமது நாட்டிலுள்ள சிதிலமடைந்துள்ள பழைமையானகோயில்களைப் புனருத்தாரணம் செய்வதற்கு உறுதி பூண்டிருக்கிறது என்றும், நமது இந்தியக்கலாச்சாரம், வேதங்களைப் பாதுகாத்தல் போன்ற பணிகளைச் செய்வதில் பெரிதும் ஈடுபாடு கொண்டுள்ளது என்றும் கூறினார்.

தேவஸ்தானச் செயலாட்சித் தலைவர் திரு. ஜி. குமாரசுவாமிரெட்டி, ஐ.ஏ.எஸ்., அவர்கள் விரிவானதோர் அறிக்கையைச் சமர்ப்பித்தார். தேவஸ்தான நிர்வாகத்தின் நெடுங்கால வரலாற்றைக் குறிப்பிட்டு, அது எவ்வாறு யாத்திரிகளுக்குக்குச் சிறப்பான, பயனுள்ள வகையில் வசதிகளைச் செய்து தருவதால் காலத்திற்குத் தகுந்த ஏற்பாடுகளை மேற்கொண்டு வந்திருக்கின்றது என்பதை எடுத்துக் கூறினார். மேலும், அதிகப்படியான வருமானத்தை மக்களுக்கு உபயோகமான வழிகளில்-மருத்துவமனைகள், மலிவு விலையிலும், சில சமயம், விலையின்றியும் ஏராளமான சமய நூல்களை வெளியிடுவது, அனாதை இல்லம், ஏழைகள் விடுதி, உடல் ஊனமுற்றோருக்கு உதவி, தொழிற்பள்ளிகள் போன்றவற்றை நிறுவிப் பராமரித்துவருவதில் செலவழிக்கிறது என்பதையும் அவர் எடுத்துக் கூறினார். வேதங்களைப் பாதுகாக்கவேண்டும் என்னும் எண்ணத்துடன் மாபெரும் வேத விற்பன்னர்களின் உதவியுடன் அவற்றை ஒலிப்பதிவு செய்வதற்கான மிக நவீன முறை ஒலிப்பதிவுக்கூடம் ஒன்று தேவஸ்தானத்தினரால் நிறுவப்பட்டு உபயோகிக்கப்பட்டு வருகிறது என்பதையும் அவர் எடுத்துச் சொன்னார். ஆயுர்வேதக் கல்லூரி, யோகப்பயிற்சி நிலையம் ஆகியனவும் தேவஸ்தானத்தினரால் நடத்தப் பட்டு வருகிறது என்பதையும் அவர் தமது அறிக்கையில் சுட்டிக் காட்டினார்.

ஆந்திரப்பிரதேச அரசின் தலைமைச் செயலரான திரு. பி. என. ஜெயஸிம்ஹா, ஐ.ஏ.எஸ். அவர்கள், இன்று அயல்நாடுகளில் வசிக்கும் இந்தியர்கள் இந்துக்கோவில்களைக் கட்டுவதில் தேவஸ்தானத்தின் ஒத்துழைப்பை நாடுகின்றனர் என்றும், தேவஸ்தானம் இந்து சமயக்கடவுளரின் விக்கிரகங்களை ஸ்தபதிகளின் துணைகொண்டு செய்வித்து அனுப்பு

இன்றனர் என்றும் கூறி,இது தேவஸ்தானம் செய்யும் போற்றத் தகுந்த பணியாகும் என்று சொன்னார்.

முதல்வரின் மனைவியான திருமதி. பஸவ தாரகம் அவர்கள், நூற்றுக்கு மேற்பட்ட கட்டுரைகளையும் ஐந்நூறுக்கு மேற்பட்ட பக்கங்களையும் கொண்ட தெலுங்கு, தமிழ், இந்தி, கன்னடம், ஆங்கிலம் ஆகிய ஐந்து மொழிகளிலும் மணம் வீசும் பொன் விழா மலரினை வெளியிட்டார்.

முதல்வர் திரு. என். டி. ராமராவ் தேவஸ்தானம் பொன்விழாவையொட்டி வெளியிட்டிருக்கும் ஐம்பது நூல்களை வெளியிட்டு, நூலாசிரியர்களையும் மாலையிட்டுக் கௌரவித்தார்.

பொன்விழாக் கொண்டாட்டத்தின் ஒரு கூறாக, தேவஸ்தானம் நடத்திய அகில இந்திய பல்கலைக் கழக மட்டத்தில் முதுகலை மாணவர்களுக்கான, 'அறிவியலும் சமயமும்' என்றும் பொருள்பற்றிய பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கு முதல்வர் திரு. என். டி. ராமாராவ் பரிசுகள் வழங்கினார்.

முதல் பரிசு : 10 கிராம் எடையுள்ள தங்கடாலர்.

திரு. கஷ்ூல் சேத், ஜாதவ்பூர் பல்கலைக்கழகம், மே. வங்காளம்

இரண்டாம பரிசு : 5 கிராம் எடையுள்ள தங்கடாலர்.

குமாரி. ராதா ராமசந்திரன், உஸ்மானியா பல்கலைக் கழகம், ஹைதராபாத்.

மூன்றும பரிசு ; 10 கிராம் எடையுள்ள வெள்ளி டாலரும, செப்பினல இழைககப்பட்ட திரு வேங்கடவன படமும.

குமாரி ஜோதி கல்பாக், கர்நாடகா பலகலைக் கழகம், தார்வார்.

ஆறுதல் பரிசுகள் : 10 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர்.



1. குமாரி லதா ஏ - பண்டிட், குல்பர்கா பல்கலைக்கழகம், கர்நாடகா.

2. திரு. ஆர். விஜயநந்தன் ரெட்டி, உஸ்மானியா பல்கலைக் கழகம், ஹைதராபாத்.

திரு. என். டி. ராமாராவ் அவர்கள் பொன் விழாவினைத் துவக்கி வைத்துப் பேசுகையில், தேவஸ்தான நிர்வாகத்தினர் ஐம்பது ஆண்டுகளில் செய்துள்ள பணியினைப் பாராட்டி, தேவஸ்தானத்தின் உபரி வருமானத்தைப் பயனுள்ள சமுதாயத் திட்டங்களுக்காகச் செல விடுவது முறையானதே ஆகும் என்று சொன்னார். கடவுள் என்னும் கருத்தினை இராமாயண காலம் முதல் ஆராய்ந்து, மக்களைக்காப்பாற்றுபவனாக, மக்களுக்கு என்றும் நன்மை புரிபவனாகக் கடவுள் எவ்வாறு இருந்து வந்துள்ளார் என்பதை விரிவாக விளக்கினார்; புராண, இதிகாச காலங்களில் சமுதாயவியல் அம்சங்கள் எவ்வாறு சமய வாழ்வுடன் பின்னிப்பிணைந்திருந்தன என்பதை எடுத்துச் சொல்லிய முதல்வர்மக்கள் சேவையே மகேசன்சேவை என்பதை வலியுறுத்தினார். திருமலை திருப்பதிப் பகுதி, ரோமிலுள்ள 'போப்' ஆண்டவனின் வாடிகன்நகர அமைப்பைப்போல் திருத்தி அமைக்கப்படும் என்றும், அதன் விளைவாக சமய வளர்ச்சி இப்பகுதியில் எவ்வகை இடையூறும் இன்றி வளர்ச்சி அடையும் என்றும் தெளிவு படுத்தினார். யாத்திரிகர்களுக்கும் பிறருக்கும் பயன்படும் வகையில் ஒரு மிக நவீன மருத்துமனை, யாத்திரிகர்களின் ஒத்துழைப்புடன் ஒரு இரத்தச் சேமிப்பு நிலையம், திருப்பதி ஊரினுள் போக்குவரத்து நெரிசலைத் தவிர்க்கும் பொருட்டு, திருப்பதி சுற்றிலும் ஒரு வட்டச்சாலை ஆகியனவும் விரைவில் அமைக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

தேவஸ்தான மேலாண்மைக் குழுவின் உறுப்பினரான திரு. தலாரி ருத்ரய்யா எம். எல். ஏ. அவர்கள் நன்றி நவின்றார்.

பின்னர், முதல்வர் திரு. என். டி. ராமாராவ் அவர்கள் தேவஸ்தானத்தின் மலர்த் தோட்டத் துறையினர் கலப்பு வகையில் உருவாக்கிய 'என். டி. ஆர். க்ரோட்டன்' என்னும் செடி வகையினை அறிமுகப்படுத்தினார்.

மாநில முதல்வரும் அவர் குழுவினரும் பொன் விழாவிற்கென்றே தேவஸ்தானத் துறைகள் பல சிறப்பாக அமைத்திருந்த அரும் பொருள் காட்சி அரங்கம, தாஸ ஸாஹித்திய அமைப்பு அரஙகு 'ஸப்தகிரி' பத்திரிகை அரங்கு, நூல் வெளியீட்டுத் துறை அரங்கு முதலியவற்றைப் பார்வையிட்டார். 'ஸப்தகிரி' பத்திரிகை அரங்கில் அன்னமாச்சாரியரின் சங்கீர்த்தனங்கள் பொறிக்கப்பட்டுள்ள செப்பேடுகள் எவ்வாறு மின்-வேதியியல் முறையில் சுத்தமாக்கப்படு

கின்றன என்பதை அவர் ஆர்வத்துடன் கேட்டு அறிந்து கொண்டார்.

பொன் விழா ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்த தேவஸ்தான அதிகாரிகள் மற்றும் அரசு அதிகாரிகள் ஆகியோரை முதல்வர் பாராட்டி, விடை பெற்றார்.

ஏப்ரல் 22, 1984, மாலை

மாலை நிகழ்ச்சிகள் சப்ளாக்கட்டை பஜனை, கோலாட்டம், பண்டரி பஜனை, நாம ஸங்கீர்த்தனம் போன்ற பலவகைப் பஜனைகளுடன் துவங்கின.

திருமதி ஆர். ஜி. சோபாராஜு அவர்கள் தமது குழுவினருடன் அன்னமாச்சாரியரின் சங்கீர்த்தனங்களை இனிமையாகப் பாடி அவையினரின் பாராட்டுதலைப் பெற்றார்.

பிறகு, சமயச் சொற்பொழிவு வரிசையைத் துவக்கிய குற்றாலம் திரு திரிவிக்கிரம ராமானந்த பாரதி சுவாமி அவர்கள் பக்தியின் முக்கியத்துவத்தைப் பற்றி எடுத்துரைத்தார். கண்டி க்ஷேத்ரத்தைச்சேர்ந்த சுவாமி ராமகிருஷ்ணானந்தர் வாழ்வின் ஒழுக்கத்தையும் ஆன்மிகக் கட்டுப் பாட்டினையும் கடைப்பிடிக்க வேண்டிய தன் தேவையைக் குறிப்பிட்டார். குண்டூர் டாக்டர் பிரசாதராய குலபதி கஜேந்திர மோட்ச நிகழ்ச்சியை ஒரு புதிய கோணத்திலிருந்து விளக்கினார். இந்து தர்மத்தைப் பற்றிப் பேசிய டாக்டர் போயி. பீமண்ணா எம்.எல்.சி. பிற்பட்ட வகுப்பினரையும் தாழ்த்தப்பட்ட நிலையிலுள்ளோரையும் இந்து சமுதாயத்தின் பிரதானப் பகுதியுடன் இணைப்பதில் தேவஸ்தானத்தினர் தனி முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என வலியுறுத்தினார். டாக்டர் நந்தூரி ராமகிருஷ்ணமாச்சாரியா மகாபாரதத்திலிருந்து சில படிப்பினைகளைக் குறிப்பிட்டு அவை இன்றைய சமுதாயத்திற்கும் எவ்வாறு பொருந்துகின்றன என்பதை விளக்கினார்.



திங்கள், ஏப்ரல் 23, 1984, காலை

திருப்பதி கோதண்ட ராம சுவாமி கோயிலிலிருந்து ஸ்ரீ ராமர், சீதை, இலட்சுமணர் அனுமார் ஆகிய உற்சவ மூர்த்திகள் நன்கு அலங்கரிக்கப் பெற்று, மேளம், வேத பாராயணம் போன்ற மரியாதைகளுடன் விழாப் பந்தலை அடைந்தன. அவர்கள் முன்னிலையில் மஹா சாந்தி ஹோமம் நடை பெற்றது.

பகவத் கீதை பாராயணம் முடிந்தவுடன், சுந்தர காண்டத்தை உள்ளத்தை உருக்கும் வகையில் பாட்டுகளாக அமைத்து திரு.'சுந்தரதாஸ்' எம். எஸ். ராமாராவ் அவர்கள் இசையுடன் பாடினார். அநுமன் கடலைத் தாண்டுதல், லங்கிணி வதம், ராவணனுடைய அரண்மனையைக் காண்டல் ஆகிய நிகழ்ச்சிகளை அன்று அவர் எடுத்துரைத்தார்.

சமயச் சொற்பொழிவு வரிசையில் முதலில் பேசிய திரு. புஷ்பகிரி பீடாதிபதி சுவாமி அவர்கள் திருப்பதிக்குச் சமய நோக்கில் தனிப் பொருள் உண்டு என்றும், வேதங்களே திருமலையாக விளங்குகின்றன என்றும் கூறினார். டாக்டர். டி. அர்க்க சோமயாஜி தர்மம் ஒன்றே மனித குலத்தைக் காப்பாற்ற வல்லது என விளக்கினார். அகில ஆந்திர சாது பரிஷத்தின் தலைவரான திரு. சர்வேச்வரானந்த சுவாமி தமது உரையில், பக்தனின் கூப்பிட்ட குரலுக்கு உடனே செவி சாய்த்து உதவி செய்பவர் திருவேங்கடவன் என்றார். ஷாத் நகரைச் சேர்ந்த திரு. சின்மயானந்த சுவாமி பல பக்தர்கள் திருமலைக்கு வந்து பேறு பெற்றுள்ளனர் என்றும், சமீப காலத்தில் தறிகொண்ட வெங்கமாம்பா, மலையாள சுவாமி முதலியோர் திருமலையில் தவம் புரிந்தவர்கள் என்றும், திருமலை ஒரு சித்தி க்ஷேத்திரம் என்றும் சொன்னார். டாக்டர் தாசரதி, திருவேங்கடவன் இமயம் முதல் குமரி வரையுள்ள மக்களை மட்டும் ஒன்று படுத்துவதல்லாது, பிரபஞ்ச ஒருமைப்பாட்டினையும் சாதிப்பவர் என்று குறிப்பிட்டார். டாக்டர். ரத்னாகர பாலராஜு அக அமைதி அல்லது ஆன்ம சாந்தியை அளிக்க வல்லது பிரம்ம வித்தைரீய என்று கூறினார். திரு. முதிவர்த்தி கொண்டமாச்சார்யுலு கலியுகத்தில் கை கொடுப்பது 'நாமஸ்மரணம்' ஒன்றே என்பதை பகவத் கீதை, விஷ்ணு ஸஹஸ்ர நாமம் ஆகியவற்றிலிருந்து மேற்கோள்களுடன் வலியுறுத்தினார்.

தேவஸ்தானத்தின் இந்து தர்ம ரக்ஷண அமைப்பின் செயலர் திரு. சமுத்ரால லக்ஷ்மணய்யா நன்றி கூற, காலை நிகழ்ச்சிகள் நிறைவு பெற்றன.

ஏப்ரல 23, 1984, மாலை

பஜனைக் குழுக்களின் பாடல்களுடன் மாலை நிகழ்ச்சிகள் துவங்கின.

தேவஸ்தானம் அன்னமாச்சார்யா அமைப்பைச் சேர்ந்த இசைக் கலைஞர்கள் திரு. பி. எஸ். ரங்கநாத், திரு. நாகேச்வர நாயுடு, திருமதி ஜானகி ரமணா ஆகியோர் அன்னமாச்சார்யா பாடல்களை இனிமையாக வழங்கினர்.

மாத்ருஸ்ரீ சிந்தலபூடி யோகினி மாதா அவர்கள், தன்னலமற்ற பக்தியை மக்கள் பயில வேண்டும் என்றும், ராமதாஸ், அன்னமய்யா, துளஸிதாஸ் முதலியவர்கள் அத்த



கையவர்கள் என்று விளக்கினார். காகின்ஸபுரம் திரு. தயானந்தசுவாமி இறைவனை நினைக்கும்நாளே நன்னாள் என்றும், எனவே பொன்விழா நாட்கள் நன்னாட்களே என்றும் பொன் விழாவும் இறைவனின் ஆராதனையே என்றும் சொன்னார். தெனாலி திரு. நிர்மலானந்த ஸ்வாமி தமது உரையில், நாம் நமது சனாதன தர்மத்தை மறந்து விட்டோம். அது மரணத்திற்கு ஒப்பானது, பஞ்ச பூதங்களை பயன்படுத்துவதில் நமக்கு சுதந்திரம் அளித்திருப்பதற்காக நாம் இறைவனுக்கு நன்றி செலுத்த வேண்டும், நாம் செய்யும் நல்ல செயல்களே நம்மைப்பாதுகாக்கும் என்று எடுத்துக் கூறினார். திரு. பிரஸன்னானந்த சுவாமி நமது தர்மம் ஒன்றே 'எல்லோரும் நலமுடன் இருக்கவேண்டும்' என்னும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டது என்பதைக் குறிப்பிட்டார். பக்தியே நம்மைக் கலியுகத்தில் காப்பாற்ற வல்லது என்று உரைத்தார் திரு பிமானந்த சுவாமி. தேவஸ்தான மேலாண்மைக் குழு உறுப்பினரான திருமதி நன்னப்பநேநி ராஜகுமாரி பேசுகையில், யாத்திரிகர்கள் கோவில் உண்டியலில் சேர்க்கும் பணம் மக்களுக்குப் பயன்படும் வழிகளில் மருத்துவமனை, கல்விக் கூடங்கள், சத்திரங்கள், வேத பாடசாலைகள், ஆயுர்வேதக் கல்லூரி போன்றவைகளை நிறுவுவதிலும் பராமரிப்பதிலும் எவ்வாறு செலவளிக்கப் படுகிறது என்பதை வலியுறுத்திச் சொன்னார். நமது இதிகாசங்களிலும் புராணங்களிலும் உள்ள பல்வேறு எடுத்துக் காட்டுக்களிலிருந்து இன்றைய மாதர் சங்கம் கற்றுக் கொள்ள வேண்டியது நிறைய உள்ளது என்றும், சீதை இலட்சுமணன் சொல்லைக் கேளாது ராவணனால் தூக்கிச் செலுத்தப்பட்டது, திரௌபதியின் சமய சந்தர்ப்பம் தெரியாத ஏளனச் சிரிப்பு காரணமாக துரியோதனன் பழிவாங்க உறுதி பூண்டது அவற்றுள்சில என்றும் கூறி, மாந்தர் தன்னலத்தையும் பேராசையினையும் மறந்து கடமைகளை நிறைவேற்ற வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டினார்.

டாக்டர் கொண்டவீட்டி வேங்கட கவி ஒருகாலத்தில் 'தர்மம்' ஆகஇருந்தது வேறொரு காலத்தில் 'அதர்ம' மாக ஆவது உண்டு காலத்திற்கேற்ப பழக்க வழக்கங்கள் மாறுகின்றன. எனவே, யாத்திரிகர்களின் காணிக்கைகளைக் காலத்திற்கேற்ப மக்களின் மேல்பாட்டிற்காகச் செல விடுவது பொருத்தமே எனக்கூறினார். திரு மதுனபந்துல சத்திய நாராயண சாஸ்திரி நாமஸ்மரணையை எங்கு வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் செய்து பயனடையலாம் என்று சொன்னார். திரு நாரலராம ரெட்டி, ஒரு முனைச் சிந்தனையுடன் செயலில் ஈடுபடுவது நமக்கு அவசியம் என்பதை வலியுறுத்தினார்.

இரவில் திரு. வங்கல பட்டாபி பாகவதர் 'ஸ்ரீநிவாஸ கல்யாணம்' ஹரிகதை நிகழ்த்தினார்.

செவ்வாய், ஏப்ரல் 24, 1934 காலை

திருப்பதி ஸ்ரீ கபிலேச்வரசுவாமி, ஸ்ரீ காமாட்சிதேவி உற்சவமூர்த்திகள் மூன்றும் நாள் காலை பந்தலில் வீற்றிருந்தனர். அவர்களின் திருச்சந்நிதியில் மஹாருத்ர யாகம் செய்யப்பட்டது.

கீதை பாராயணம் நடந்த பின்னர் திரு. 'சுந்தரதாஸ்' எம். எஸ். ராமாராவ் தமது சுந்தரகாண்டப் பாடல்களைப் பாடினார். 'சீதை தரிசனம்' அன்று நிறை அடைந்தது. (திரு. ராமாராவ் குழுவினர் தொடர்ந்து ஐந்து நாட்களுக்கு திருப்பதி அன்னமாச்சார்யா கலாமந்திரில் சுந்தர காண்டப் பாடல்களைப் பாடினார்.)

ராஜமந்திரி சாதுஸ்திரிகள் மடத்தைச் சார்ந்த மாதா தயாபாயம்மாவின் பிரார்த்தனையுடன் சமயச்சொற்பொழிவு நிகழ்ச்சி தொடங்கியது. கைலாஸக்கோனை திரு. ஞானானந்த சுவாமி பொறுமை, இரக்கம், கருணை போன்ற சிறப்பியல்புகளையுடைய தர்மத்தின் உருவமே கடவுள் என்றும், எனவே, மக்கள் அறவழியில் நிற்க வேண்டும் என்றும் கூறினார். வீரபத்ராபுரம் சாதுஸ்திரீகள் மடத்தைச் சேர்ந்த சுவாமினி சாந்திபாயம்மா, பகவத் கீதையை தினமும் ஒரு அத்தியாயமாவது, அல்லது ஒரு சுலோகத்தையாவது பாராயணம் செய்வது மனத்தைத் தூயதாக்கி, இறைவனை ஈர்க்கும் எனக் கூறினார். டாக்டர் மருப்பூடு கோதண்டராம ரெட்டி ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி வடநாட்டைச் சேர்ந்தவராயினும் தென்னாட்டில் அவருடைய கோவிலோ பஜனைக்கூடமோ இல்லாத ஊரே கிடையாது என்றுசொல்லுமளவிற்கு



நம்முடன் ஒன்றிவிட்டார் என்று எடுத்துச் சொன்னர்.

ஏப்ரல் 24, 1984 மாலை

நாட்டின் நாலு பக்கங்களிலிருந்தும் வந்துள்ள பஜனைக் குழுக்களின் நிகழ்ச்சிகள் காண்போர் அனைவரின் கருத்தையும் கவர்ந்தன.

திருப்பதியைச் சேர்ந்த திரு. எஸ். உமாபதி, திருமதி. ரத்னகுமாரி, சென்னையைச் சேர்ந்த பிரபல சினிமாப் பாடகர் திரு. ஆனந்த் ஆகியோர் அன்னமாச்சார்யாவின் பாடல்களை இனிமையுடன் பாடினர்.

திருப்பதி எஸ். வி. பாலமந்திரின் சிறுவர், சிறுமியரின் பகவத் கீதை பாராயணத்திற்குப் பிறகு, பொன் விழாவின்போது 'பூக்கிண்ணங்கள்' அமைத்திருந்தவர்களுக்குத் திருமதி. குமார சுவாமி ஒட்டி அவர்களால் பரிசுகள் வழங்கப்பட்டன. தேவஸ்தான மலர்த்தோட்டக் கண்காணிப்பாளர் திரு. தம்மண்ணு பரிசுக்குரியவர்களைத் தேர்ந்தெடுத்தார்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமியின் பிரதிநிதிகள் தேவஸ்தான மேலாண்மைக் குழுத் தலைவர் திரு. வி. கே. வி. டி. சத்திய நாராயண ராஜு, எம். எல். ஏ. அவர்களுக்கும் செயலாட்சித் தலைவர் திரு. ஜி. குமார சுவாமி ரெட்டி, ஐ. ஏ. எஸ். அவர்களுக்கும் சுவாமிகளின் ஆசிகளைத் தெரியப்படுத்தி வழங்கினர். பிரதிநிதிகளுக்கும் திருவேங்கடவன் பிரசாதங்களைச் செயலாட்சித் தலைவர் வழங்கினர்.

திரு. ஜி. குமார சுவாமி ரெட்டி, ஐ. ஏ. எஸ், தேவஸ்தானப் பொன் விழா ஒவ்வொரு மாவட்டத்தின் தலைநகரிலும் நாட்டின் முக்கியமான பெரு நகரங்களிலும் 1984 ஆண்டு பூராவும் மும்மூன்று நாட்கள் நடைபெறும் என்றும், பொன் விழா மலரின் அடக்க விலை ரூ. 100/- ஆயினும், மிகக் குறைந்த விலையான ரூ. 25/-இல் விற்கப்படும் என்றும், தேவஸ்தானம் இந்து தர்ம ரக்ஷண நிறுவனம் நடத்தும் புராணப் பரீட்சைகளில் முதலாவதாக வருபவரின் மேல் படிப்பு முழுவதற்குமான செலவு அனைத்தையும் தேவஸ்தானமே மேற்கொள்ளும் என்றும் அறிவித்தார்.

ஏர்ப்பேடு திரு: வித்யாநந்தகிரி ஒவ்வொருவரும் தக்க குருவை அடைந்து பிரம்ம வித்தையைப் பெற வேண்டும் என்று உரையாற்றினர். ஸ்ரீ காளஹஸ்தி திரு. வித்யாப் பிரகாசானந்தகிரி சுவாமி, ஆன்மிக ஆற்றலைப்பெறுவது முதலில் கடினமாயிருக்கக்கூடும், ஆனால், தொடர்ந்து சாதனை செய்தால் அதை அடையலாம் என்றும் குறிப்பிட்டார். டாக்டர் திவாகர்ல வேங்கடாவதானி ஐந்து வகைப் பக்திகளில் தாஸ்ய பக்தியே சிறந்தது, அதையே பக்த ராமதாஸ், சபரி போன்றவர்கள் பின்பற்றி மேன்மையுற்றனர் என எடுத்துச் சொன்னர். திரு. பி. ராமராஜு 'தர்மம் தன்னைக் காப்பாற்றுபவனைக் காப்பாற்றுகிறது' என்று கூறி, தேவஸ்தானத்தின் தர்மப் பிரசாரப்பணியில் 'விச்வ ஹிந்து பரிஷத்' போன்ற நிறுவனங்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று குறிப்பிட்டார். திரு.மல்லாதி சந்திர சேகர சாஸ்திரி தர்மத்துடன் கூடிய பக்தியே பயனுள்ளது என்று கூறி, திரௌபதி, விதுரர், பீஷ்மர் ஆகியோர் அவ்வாறே செய்து காட்டினர் என்று விளக்கினர்.

தேவஸ்தானம் மக்கள் தொடர்பு அதிகாரி திரு. ராவுல சூரிய நாராயண பொன்விழாவின் வெற்றிக்குக் காரணமாயிருந்தோர் அனைவருக்கும் நன்றி கூறினர்.

திரு. தூளி பானர்ஜி பாகவதர் நிகழ்த்திய 'பார்வதி கல்யாணம்' ஹரிகதையுடன் மூன்று நாள் பொன் விழாக் கொண்டாட்டம் நிறைவு எய்தியது.



# செய்திச் சுருக்கம்

**திருப்பதி மலையில் திருப்படித்திருவிழா:**

திருப்பதி - திருமலை 'திருப்படி விழா'வில் 5 ஆயிரம் பக்தர்கள் கலந்து கொண்டு பஜனை கோஷ்டியினருடன் கால் நடையாக மலையில் படி ஏறிச் சென்றார்கள். அப்போது பெண்கள் ஒவ்வொரு படியிலும் குங்குமம் வைத்துத் தேங்காய் உடைத்தார்கள். திருப்பதி திருமலை ஏழுமலையான் கோவிலில் ஆண்டு தோறும் சித்திரை மாதம் முதல் சனிக்கிழமை 'திருப்படி விழா' நடைபெற்று வருகிறது. 15-வது ஆண்டு படி விழா, அண்மையில் நடந்தது.

தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகம், பாண்டிச்சேரி ஆகிய மாநிலத்தின் பல்வேறு ஊர்களில் இருந்து ஏறத்சுமார் 5 ஆயிரம் பக்தர்கள் இதில் கலந்து கொண்டனர். 80 ஊர்களில் இருந்து பஜனைக் கோஷ்டியினரும் வந்து கலந்து கொண்டார்கள்.

திருப்பதியில் இருந்து 200 மைல் தூரத்தில் உள்ள கள்ளக் குறிச்சியில் (தென் ஆற்காடு மாவட்டம்) இருந்து ஏராளமான பக்தர்கள் கால் நடையாகத் திருப்பதிக்கு நடந்து வந்து இந்த திருப்படி விழா குழுவினருடன் சேர்ந்து மலை ஏறினார்கள்.

பகல் 12 மணிக்கு திருமலையை அடைந்ததும், படிவிழா பக்தர்கள் ஏழுமலையான் கோவிலைச் சுற்றியுள்ள 4 மாடவீதிகளிலும் பக்திப் பாடல்களைப் பாடிக் கொண்டு வந்தனர். பிறகு அவர்கள் கோவிலுக்குள் சென்று ஏழுமலையானை கும்பிட்டார்கள். இந்தத் திருப்படி விழாவை சென்னை டெலிவிஷன் நிலையத்தினர் படம் எடுத்தனர்.



திருமலையில் வடக்கு மாடவீதியில் படிவிழாக் குழுவினர் நாதஸ்வர இன்னிசை ஒலிக்கப் பக்திப் பாடல்களைப் பாடிய வண்ணம் வீதிவலமாக பவனி வருகின்றனர்.

படி விழாவிற்கு வந்த பக்தர்களுக்கு சாப்பாடு, மற்றும் வசதிகள் செய்வதற்காக மயிலை குருஜி சுந்தரராம சுவாமி, கார்க்கூர் தொழில் அதிபர் பாலாஜி நாயுடு, சேலம் இந்து சமயக் கல்லூரி நிர்வாக டிரஸ்டி பி. ராமகிருஷ்ணன், திருமலை டாக்டர். ராமையா, நெய்வேலி பாரிஜாதக் கண்ணன் பஜனைக் குழுவினர் செம்மார் கண்ணன் வழிபாட்டுக் குழுவினர் ஆகியோர் நிதி உதவியும், அரிசி மூட்டைகளும் கொடுத்து உதவி புரிந்தார்கள்.

குழுவின் பொதுச் செயலாளர் ஆற்காடு ஆ.செ. நரசிம்மன், பொருளாளர் வேலூர் வி. ஏ. புண்ணியகோட்டி, எஸ். கே. நாகையா ஆகியோர் திருப்படி விழாவுக்கான ஏற்பாடுகளை செய்து இருந்தனர்.

ஃ ஃ ஃ

வட ஆற்காடு மாவட்ட ஹிந்து தர்ம ரக்ஷண சமஸ்தா கிளையின் சார்பில் அண்மையில், குடியாத்தம் நகர், அமரர் ந. ராஜகோபால் நாயுடு ஆஸ்திக சமாஜத்தில் 2 நாட்களும், ஆற்காடு, தோப்புக்கானா ஸ்ரீ கெங்காதர ஈஸ்வரன் கோவிலில் ஒரு நாளும், தெய்வீக நிகழ்ச்சிகள் திருப்பதி தேவஸ்தான அதிகாரிகளைக் கொண்டு நடத்தப்பட்டன. இதில் திருப்பதி திரு. சங்கர சாஸ்திரிகளால் சாந்தி ஹோமமும்-ஸ்ரீ வேங்கடேஸ்வர சஹஸ்ர நாமமும் நடத்தி வைக்கப்பட்டன.

பிற்பகல் தி. தி. தே. ஹிந்து தர்ம ரக்ஷண சமஸ்தா செயலாளர் சமுத்ரால திரு. லக்ஷ்மணய்யா, அவர்கள் "பகவத் கீதை"யின் பெருமை பற்றி சொற்பொழிவாற்றினார்.

மாலையில் தி. தி. தே. அதிகாரி திரு. இ. கருணாகரன் அவர்கள் புராணம், கல்வெட்டு, சரித்திரம் இவைகளைக் கொண்டு ஆராய்ச்சி செய்து தொகுக்கப்பட்ட 'கோவிந்தாமிர்தம்' என்னும் தலைப்பில் அரிய

சொற்பொழிவாற்ற தி. தி. தே. அன்னமாச்சார்யா சங்கீத வித்வான் திரு. ஜி. நாகேஸ்வர ராவ் குழுவினரால் புரந்தர தாஸர்-தியாகராஜர்-குலசேகர ஆழ்வார், அன்னமாச்சார்யா போன்ற மகான்களின் பக்திப் பாடல்கள் பாடப்பட்டன.

இரவில் ஸ்ரீவேங்கடேஸ்வர மகாத்மியம் திரைப்படக் காட்சி காண்பிக்கப்பட்டது. இந்த மூன்று நாட்கள் நிகழ்ச்சிகளின்போது தி.தி.தே. இ.த.ர.ச.வ.ஆ.மா. அமைப்பாளர் ஆற்காடு திரு. ஆ. செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசி, நன்றி நவின்றார்.

தகவல்: ஆ. செ. நரசிம்மன்.

**மகா கும்பாபிஷேகம்:**

சாயாபுர சக்தி பீடமாக விளங்குவதும், நால்வராலும் நக்கீரராலும் பாடல் பெற்ற தலமுமான திரு. ஈங்கோய்மலை ஸ்ரீ லலிதாம்பிகை கோயிலின் ஜீர்ணோத்தாரண மகா கும்பாபிஷேகம் 8-6-84 அன்று வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட உள்ளது.

தகவல்:
கோயில் திருப்பணிக் கமிட்டியினர்
திருஈங்கோய் மலை.

**பிரம்மோத்சவம்:**

உத்திர பிரதேசம் ரிஷிகேஷ் ஆந்திர ஆசிரமத்தில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் வருடாந்திர பிரம்மோத்சவம் இம்மாதம் 12-ம் தேதி முதல் 10 நாட்களுக்கு வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இப்பத்து நாட்களின் காலை மாலைப்பொழுதுகளில் பல்வகையான சமய கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன.

**ஏலம்:**

அண்மையில், மத்திய அரசின் ஒப்புதலுக்குப் பிறகு திருப்பதி தி.தி.தே. அலுவலகக் கட்டிடத்தில் கற்கள் வைத்த 76 கி.கி. தங்கநகைகள் ஏலம் விடப்பட்டன. நாட்டின் பல்வேறு பகுதிகளைச் சார்ந்த 200-ம் மேற்பட்ட ஏலதாரர்கள் இதில் கலந்து கொண்டனர். ஏலம் விடப்பட வேண்டிய 200 கி. கி. தங்க நகைகளில் 76 கி. கி. தங்க நகைகளே ஏலம் விடப்பட்டன. இதனால் தி. தி. தே. ரூ. 91.72 இலட்சம் பெற்றது. மீதி தங்க நகைகள் விரைவில் ஏலம்விட, மத்திய அரசின் ஒப்புதலுக்கு மேலாண்மைஅணுகியுள்ளது. மேலும் தன்னிடம் உள்ள 800 கி கி. எடையுள்ள தங்க நகைகளை, பகுதி பகுதியாக விரைவில் ஏலத்தில் விற்க மேலாண்மை தீர்மானித்துள்ளது. ★

# ஆசிரியர்க்கு....

'ஸப்தகிரி' ஆசிரியர் அவர்களுடைய கவனத்திற்கு,

'விஷ்ணுவின் அஷ்டாட்சர விளக்கம்' என்ற தலைப்பில் (மார்ச் 84) வேத பாகங்களைக் கொண்டு பிரணவத்தையும் மற்றும் திருவஷ்டாக்ஷரத்தைப் பற்றியும் விளக்கி அவற்றை ஆழ்வார்கள் அனுபவித்த பிரகாரத்தையும் மிகவும் நேர்மையான முறையில் விளக்கிய கட்டுரையில் அதன் ஆசிரியர் அதன் ஊடே ஒரு விஷமப் பிரசாரத்தையும் கைக்கொண்டிருக்கிறார் என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

'ஆதி சங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட ஷண்மதங்களுள் மகோன்னதம் பெற்றது வைஷ்ணவம் ஆகும். இந்த வைஷ்ணவத்தை ஸ்ரீராமாநுஜர் விளக்கம் கூறுகின்ற பொழுது விசிஷ்டாத்வைதம் என்றே குறிப்பிடுகிறார்''—இந்த பாகம் கட்டுரைக்குத் தொடர்பில்லாத ஒரு சங்கர பக்தர் தம் மனம் போனபடி பிரசாரம் செய்வதாக அமைந்தது. அவர் தமது அபிமானத்தால் எதை வேண்டுமானாலும் எழுதலாம் எனறிருக்க பத்திரிகை ஆசிரியர் என்ற முறையில் இந்த பாகத்தை நீங்களாவது பிரசுரிக்காமல் விட்டிருக்கலாம்.

ஆதிசங்கரருக்கு முன்னிட்ட காலத்தில் அதுவும் வேதபாகத்திலிருந்தும் மற்றும் ஆழ்வார் ஸ்ரீஸூக்திகளிலிருந்தும் விளக்கம் கொடுக்கப்பட்டிருக்க, ஆதிசங்கரரால் ஸ்தாபிக்கப்பட்ட 'வைஷ்ணவம்' என்பது எப்படிப் பொருந்தும், அந்த வைஷ்ணவத்தையே ஸ்ரீராமாநுஜர் விளக்கிக் கூறுகிறார் என்பது மிகவும் வஞ்சனையானது (*Hishly mischivous*) என்று எடுத்துக் காட்டினால் இதைக் கொண்டு ஒரு திருத்தத்தை உமது பத்திரிகையில் வெளியிடுவீரா?

இதுவா பத்திரிகை ஆசிரியருடைய நேர்மை?

''ஸங்க சக்கரம்........'' என்று தொடங்கிய தியான ஸ்லோகத்தில் 'நமாமிருத்ரம்' என்று கட்டுரை ஆசிரியர் எழுதி அனுப்பினால் அதையும் பிரசுரித்து பெருமைப்படுவீர்களா?

'நாராயணன்' என்ற பதத்தை நார+அயனம் என்று பிரித்து பொருள் விளக்கம் செய்யும்போது பிரபஞ்சம் முழுவதும் பரம புருஷன் அந்தர்யாமியாய் வீற்றிருக்கிறான் என்ற விளக்கம் செய்த ஆசிரியர் ஸ்ரீ வைஷ்ணவத்திற்கே அசாதாரணமான (ப்ரதான ப்ரதிதந்திரம்) விசிஷ்ட்ட அத்வைதம் ஆதிசங்கரருடைய அத்வைதத்திலிருந்து வேறுபட்ட தென்பதை ஒப்புக்கொள்வாரா?

கோயில் வழிபாட்டை குறிப்பிடும் ஆசிரியர் ஆதிசங்கரர் ஸகுண உபாஸகர் என்பதையும் அவருககு கை கொடுத்து உதவியவர் லக்ஷ்மீ நரசிம்மன் என்பதையும் அவர் த்யானம் செய்து வந்த தெய்வம் 'கோவிந்தன்' என்பதையும் தற்காலம் பிரசித்தமான சங்கரமதம் சைவாத்வைதம் மற்றும் நவீன கல்பிதமான பிரகாரங்கள் இவற்றை விளக்கி ஒரு கட்டுரை எழுதத் துணிவாரா? அப்படியே அவர் எழுதியனுப்பினாலும் உமது பத்திரிகையில் இதை பிரசுரிப்பீர்களா?

திரு. கே. ஏ. பார்த்தசாரதி,
சென்னை-44.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D PRESS, TIRUPATI-517501

